ஓம்:

# இராஜாஜீ சரிதம்



நாரண - துரைக்கண்ணன்
எழுதியது.

சக்தி பிரசுராலயம்
இராபர்ட்ஸன் பேட்டை,
மயிலாப்பூர், சென்னை.
1937

 [விலை அணா 6

## பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 8 | 17 | இரத்தினசாமி | இரத்தினசபாபதி |
| 10 | 28 | காலச்சக்கிரகத்தின் | காலச்சக்கரத்தின் |
| 15 | 4 | ஊருக்குக் | ஊருக்குப் |
| 16 | 2 | சென்னையப்பன் | சென்னைப்பச்சையப்பன் |
| 23 | 24 | 'ஆக்ஸிஜன்' | 'ஆல்கஹால்' |
| 73 | 8 | யய்லவா! | யல்லவா! |
| 87 | 26 | மந்திரியாக, | மந்திரியாகி, |

Selvarangan Press, Madras.

# சிறப்புரை.

தமிழ் நாட்டுக் காங்கிரஸ் தலைவரும், இந்தியா சட்ட சபை காங்கிரஸ் கட்சியின் உபதலைவருமான ஸ்ரீஜத் எஸ். சத்தியமூர்த்தி எம். எல். ஏ., அவர்கள் எழுதுவதாவது:—

ஸ்ரீமான் நாரண-துரைக்கண்ணன் இயற்றிய "இராஜாஜீ சரிதம்" என்னும் இந்நூலை முழுதும் படித்துப் பார்த்தேன். தம் நாட்டில் பிறந்த பெரியார்களையும் அறிஞர்களையும் தியாகிகளையும் புலவர்களையும் போற்றிப் புகழாதநாடு சிறப் படைந்ததில்லை. நம் தென்னாட்டில் பிறந்த பெரியார்களையும் அறிஞர்களையும் மதித்துப் போற்றும் வழக்கம் நம்மவர்க ளிடம் இல்லாமல் இருப்பது வருந்தற் குரியது. இப்போது தேசம் முழுதும் பாராட்டப்படும் தேசிய கவி சுப்பிர மணிய பாரதியார் உயிருடன் இருந்த காலத்தில் அவரது தேசபக்தியையும், கவித்துவத்தையும் நம்மவர்கள் அறிந்து மதிக்கவில்லை. இந் நூலாசிரியர் கூறுவதுபோல் நம்மவர்கள் வெளிநாட்டி லிருந்து வருபவர்களைத் தான் தலைவர்களாக வும், அறிஞர்களாகவும், கவிஞர்களாகவும் மதித்துப்போற்று கிறார்களே யொழிய, நமது தென்னாட்டிலேயே எவ்வளவோ பேர் அறிஞர்களாகவும், தியாகிகளாகவும் இருந்தும் அவர் களைப் பாராட்டுவதில்லை.

இந்த நிலைமையில் நண்பர் துரைக்கண்ணன் நம் தமிழ் நாட்டு மாபெரும் தலைவரும் தியாகியுமான ஸ்ரீமான் இராஜ கோபாலாச்சாரியார் அவர்கள் சரித்திரத்தை எழுத முன் வந்ததற்காக நான் அவரைப் பாராட்டுவதுடன், மிகவும் சந்தோஷமும் அடைகிறேன். இந்த சரித்திரம் நல்ல முறை

யில் எழுதப்பட் டிருக்கிறது. ஒரு பெரியாரது சரித்திரம் எழுதுவதென்றால் அவர் சம்பந்தமாகத் தமக்குத் தெரிந்த எல்லா விஷயங்களையும் எழுதி விடுவது அவ்வளவு பிரமாதமல்ல; நல்ல முறையுமல்ல. அவரது சிறப்பியல்புகளை முக்கியமாக எடுத்து எழுதுவது தான் சிறந்தது. இந்நூலாசிரியர் ஸ்ரீமான் ஆச்சாரியாரவர்களின் வாழ்க்கையில் தாம் கண்ட சிறப்பியல்புகளையே எடுத்து எழுதியிருப்பது பாராட்டுதற்குரியதாகும்.

ஸ்ரீமான் இராஜகோபாலாச்சாரியார் அவர்களை எனக்குச் சுமார் 25-வருஷங்களாகத் தெரியும். அரசியலில் பல சந்தர்ப்பங்களில் நான் அவரோடு சேர்ந்து வேலை செய்திருக்கிறேன்; இப்போதும் செய்து வருகிறேன். ஆகவே அவரது சரித்திரத்தை எழுத முன்வந்த ஆசிரியர் என்னையும் சம்பந்தப்படுத்தி எழுதி யிருப்பதைக் கண்டு நான் ஆச்சரியப்படவில்லை. இந்நூலில் கூறப்பட்டுள்ள என்னைப்பற்றிய விஷயங்கள் சம்பந்தமாக நான் ஒன்றும் கூற விரும்பவில்லை. என்றாலும், இது ஆசிரியருக்கு என்னிடமுள்ள விசுவாசத்தையே காண்பிக்கிற தென்று கருதுகிறேன்.

இதுபோலவே நம் நாட்டு முன்னேற்றத்துக்காகப் பாடுபடும் பெரியார்கள் அறிஞர்கள் தியாகிகள் ஆகியோரின் வரலாறுகள் பலவெளிவரவேண்டும் என்பதே எனது அவா. அப்போதுதான் நம்நாடு முன்னேற்றமடைந்து நாமும் சுயமரியாதையுடன் வாழ முடியும்.

"சுந்தரா"
தியாகராயநகர்.

எஸ். சத்தியமூர்த்தி.

# நூன்முகம்.

"நாம் வாழ்க்கையில் அநேகமாய் எல்லாவற்றிலும் விதேசி மோகத்தில் ஆழ்ந்து விட்டோம். தாய் மொழியாகிய தமிழ் நமக்கு இரமிப்பதில்லை. ஆங்கில மொழிதான் சிறந்ததெனக் கருதுகிறோம். துணி உடுத்துவது நாகரிகமில்லை; கோட்டும் ஹாட்டுந்தான் நாகரீகம். நம் நாட்டுக்காட்சிகள், நம் நாட்டுப்படங்கள், நம் நாட்டு மனிதர்கள்கூட கண்ணுக்கு நன்றாயிருப்பதில்லை ; அயல் நாட்டுக் காட்சிகள், படங்கள், அயல் நாட்டு மனிதர்கள் தான் அழகாய்த் தோன்றுகிறார்கள். சாப்பாட்டில் கூட சாதம் சுகமில்லை ; ரொட்டிதான் சாப்பிடவேண்டும். மூக்கும் அயல் நாட்டு ஸெண்டுகளைத் தான் முகர விரும்புகிறது. இப்படி நம்முடைய மற்ற இந்திரியங்கள் எல்லாம் விதேசிமோகத்தில் வீழ்ந்துவிட, காது ஒன்று மட்டுந்தான் சுத்த சுதேசியாயிருந்து வருகிறது. அயல் நாட்டுச் சங்கீதம் எவ்வளவு உயர்ந்ததாயிருந்தாலும் நமக்குப் பிடிப்பதில்லை; நம்முடைய சங்கீதந்தான் பிடிக்கிறது. இப்படியாக நம்முடைய சங்கீதக்கலை ஒன்று தான் நம்மையெல்லாம் இந்தமட்டும் சுதேசிகளாய், இந்தியர்களாய் வைத்துக் காப்பாற்றுகிறது........................" என்று நமது தமிழ்நாட்டுத் தலைவர் ஸ்ரீஜத் - இராஜகோபாலாச்சாரியார் கிறிஸ்துமஸ் வாரத்தில் சென்னையில் நடைபெற்ற தென்னிந்திய சங்கீத வித்வத் சபை மகா நாட்டைத் திறந்து வைத்தபோது குறிப்பிட்டுப் பேசினார். அப்பெரியாரது சரிதத்தை எழுதவந்த யானும் அவர் கூறிய உண்மைகளை முழுதும் ஆமோதிக்கிறேன்.

இவ் விஷயத்தில் அயல்நாடு வரையில் கூட போக வேண்டியதில்லை. நம் இந்தியாவையே எடுத்துக்கொள்வோம். மேற்குறித்த குற்றச்சாட்டுகள் வட நாட்டாருக்கு முற்றும் பொருந்தாது. அவர்களில் ஒரு சிலர் தவிர,

பெரும்பாலார் எவ்விஷயத்திலும் சுதேசப் பற்றுடையவர்களாகவே யிருக்கின்றனர். நம் தமிழ்நாட்டுச் சகோதரர்கள் தான் இவ்வளவுதூரம் தேசிய விழிப்பு ஏற்பட்டிருக்கும் இக்காலத்திலும், கலை, மொழி, சமூகம் முதலிய எவ்விஷயத்திலும் அவ்வளவாகப் பற்றில்லாதவர்களாக இருக்கின்றனர்.

தேசீய, அரசியல் விஷயத்திலேயே எடுத்துக்கொள்வோம். நம் பாரத நாட்டு விடுதலைக்காக, மற்ற மாகாணத் தலைவர்கள் தொண்டர்களைப்போல, நம் மாகாணத் தலைவர்களும், தொண்டர்களுந்தான் பாடுபட்டு வருகிறார்கள். அவ்வித மிருந்தும், நம் நாட்டுமக்கள் பெரும்பாலார் வடநாட்டுத் தலைவர்களை மதித்துப்போற்றுவதுபோல், நம் தலைவர்களை மதிப்பதில்லை ; பாராட்டுவதுமில்லை. நாமே நம் தலைவர்களுக்கு மதிப்புகொடுத்துக் கௌரவிக்கா விட்டால், பிற நாட்டார் அவர்களை எவ்விதங் கௌரவிப்பார்கள் ?

அதுபோகட்டும் ; வடநாட்டுத் தலைவர்கள் பலரது சரித்திரங்கள் ஆங்கிலத்திலும் தமிழிலும் நம்மவரால் எழுதி வெளியிடப்பட்டு நம்மிடையே உலாவுகின்றனவே! நம் தலைவர்கள் யாருடைய சரித்திரமாவது எவராலாவது எழுதப்பட்டு இதுவரை வெளிவந்திருக்கிறதா ! நானறிந்த மட்டில், தங்களது அரிய தியாகத்தாலும், இடைவிடா தேசசேவையாலும் அகில இந்திய பிரசித்தி பெற்றிருக்கும் ஸ்ரீஜத் சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார், ஸ்ரீஜத் சத்தியமூர்த்தி போன்ற தலைவர்களுடைய சரித்திரங்கள் கூட புத்தக ரூபமாக வெளிவரவில்லை என்று தெரிகிறது.

இந் நிலைமையைச் சிந்தித்துப் பார்த்தபோது என் மனம் மிகவும் வருந்தியது. ஆகவேதான், தமிழ் நாட்டுத் தேசீயத் தலைவர்களிலேயே ஒப்புயர்வற்று விளங்குபவரும், தற்போது சென்னைப் பிரதம மந்திரியா யிருப்பவருமான சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியாரது சரித்திரத்தை எழுத முற்பட்டேன். நான் இவ்வரிய முயற்சியில் துணிந்து ஈடுபட்டதற்கு மற்றொரு முக்கிய காரணமுமுண்டு. அது என்னவென்றால், ஆச்சாரியார் தமது ஆட்சியில் மதுவிலக்குத் திட்டத்தைச் சட்டமாக்கி முதன்முதலாக, சேலம் ஜில்லா

வில் அமுலுக்குக் கொண்டு வந்திருக்கும் ஒப்பற்ற அரிய செயலே யாகும்.

ஆச்சாரியார் கொண்டு வந்திருக்கும் மதுவிலக்கு சட்டத்தின் பலாபலன்களைச்சர்வதேச மக்களும் ஆவலுடன் கவனித்து வருகிறார்களாயினும், நான் இச்சட்டம் வெற்றி கரமாக நடைபெற வேண்டுமே என்று கவலையோடு கவனிப்பதற்கு முக்கிய காரணமொன்று உண்டு. மது பானத் தொழிலில் பல சாதியாரும் ஈடுபட்டிருக்கிறார்களா யினும், தமிழ் நாட்டைப் பொறுத்தவரை எனது சமூகமே உலக அபவாதத்துக்கு ஆளாயிருக்கிறது. என் சமூகத் துக்கு ஏற்பட்டிருக்கும் அக்களங்கத்தை எவ்விதமாயினும் போக்கவேண்டுவது என்போன்ற வாலிபர்களது கடமை யென்பதை நான் உலகறிவு பெற்றதி லிருந்தே உணர்ந் திருக்கிறேன்; ஆயினும், இவ் விஷயத்தில் தீவிரமாக யோசித்து வந்தும், அக்களங்கத்தை உண்மையாக நீக்கக் கூடிய திட்டமெதுவும் எனக்கு இதுவரை புலப்படவில்லை. இந்நிலையில், ஆச்சாரியார் பிரதம மந்திரியாக வந்ததும், மக்களை அலைத்துவரும் மதுவென்னும் கொடிய அரக்கனைத் தமிழ் நாட்டினின்றும் ஓட்டச் சட்டங் கொண்டு வந்திருப் பதை அறிந்து, நான் அடைந்த மகிழ்ச்சிக்கு அளவே யில்லை. ஏனென்றால், மதுவிலக்குச் சட்டம் தமிழ் நாட்டில் வெற்றியடையுமானால், அச்சட்டத்தின் வாயிலாக, குடிப் பழக்கம் நம் மக்களை விட்டு ஒழியுமானால், நான் பிறந்த சமூகத்திற்கு நீண்ட காலமாக இருந்துவரும் பெருங்கறை என்போன்றவர்களது முயற்சியின்றியே தானே நீங்கு மல்லவா!

எங்கள் சமூகத்துக்கு இருந்துவரும் நீங்காக்கறையை-இழிவை - தமது அரிய செயலால் போக்க முற்பட்டிருக்கும் ஆச்சாரியாருக்கு நானும் எனது சமூகமும் மிகவும் நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறோம் என்பதைக் கூறவும் வேண்டுமோ! அவ்வகையில், நான் ஆச்சாரியாரிடங் கொண் டிருக்கும் அன்பிற்கு அறிகுறியாக, அப்பெரியாரது வாழ்க்கை வரலாற்றை எழுத முற்பட்டேனே யொழிய,

மற்றவர்களைக் காட்டிலும் ஆச்சாரியாரை நன்கு அறிந்தவ னென்றோ, அவரிடம் உரிமையுடையவனென்றோ கருதி எழுதவில்லை. ஆச்சாரியார் போன்ற பேரறிஞர் - தியாகி சரித்திரத்தை அவர் போன்ற பெரியார்களே எழுத வேண்டு மென்பது என் கருத்து.

ஆச்சாரியாரது வாழ்க்கை வரலாறுகளை அறிந்து கொள்ள நான் எடுத்துக் கொண்ட பெருமுயற்சியை இங்கு விவரிப்பது அநாவசியம். பத்திரிகைகளின் பழைய ஏடு களைப் புரட்டிப் பார்த்து விஷயங்களைச் சேகரிப்பதும், சம் பந்தப்பட்ட விஷயமறிந்தவர்களிடமிருந்து தகவல்களைக் கிரகிப்பதும், இவ்விதங் கிரகித்த விஷயங்களில் எவ்வளவு தூரம் உண்மையிருக்கிறது என்று சீர்தூக்கிப் பார்த்து, கொள்ளத் தக்கவைகளைக் கொண்டு, தள்ளத்தக்கவைகளைத் தள்ளி ஒழுங்காக எழுதுவதிலுமுள்ள கஷ்டத்தை இவ்வித முயற்சியில் ஈடுபடுபட்டவர்கள் தான் அறிந்து கொள்ள முடியும். ஆனல் இவ்வித அருமுயற்சியில் நான் எவ்வளவு தூரம் வெற்றி பெற்றிருக்கின்றேன் என்பது எனக்குத் தெரியாது. என்னையறியாமலும் சில பிழைகள் நேர்ந்திருக்க லாம். ஆச்சாரியார் போன்ற ஒரு பெரிய தியாகியின் சரிதத்தைப் படிப்பவர்கள் குற்றத்தையுங் குணமாகக் கொள்வார்களே யன்றி, அதையே பெரிதாகப் பாராட்ட மாட்டார்களென்று நம்புகிறேன்.

அரசியல் துறையில் மட்டும் மல்லாது, சமூகம், மொழி ஆகிய வற்றிற்கும் அரிய சேவை செய்திருக்கும் ஆச்சாரி யாரது சரிதம், அனைவர்க்கும் ஒரு ஜோதி மயமான இலட்சிய மாய் விளங்குமென்பது அடியேன் கருத்து. எனவே, தமிழ் நாட்டுச் சகோதர சகோதரிக ளனைவரும் ஆச்சாரி யாரது வாழ்க்கையை ஆதர்சமாகக்கொண்டொழுகி உலகில் மேன்மை யடைவார்களாக.

மயிலாப்பூர்
2—1—38

ஆசிரியன்.



மகாத்மா காந்தியும், தமிழ்நாட்டு காந்தியும்.

# பொருள் அடக்கம்.



ஓம்:

# இராஜாஜீ சரிதம்

## தோற்றுவாய்.

உலகில் எத்தனையோ மகான்கள் - பெரியார்கள் - அறிஞர்கள் - தோன்றினர்; வாழ்ந்தனர்; மறைந்தனர். ஆனால், அவர்களில் ஒரு சில மெய்ஞ்ஞானிகளது பெயர்கள் தான் உலகில் அழியாது நின்று நிலவிவருகின்றன. அதற்குக் காரணமென்ன? அப்பெரியார்கள் செய்த தன்னலமற்ற சேவையும், தியாகச்செயல்களும், மக்கள் சமூகத்தை வாழ்விக்க வரையறுத்த உன்னத லட்சியங்களுமேயாகும். அவர்கள் ஆற்றிய அற்புதங்களும், உபதேசங்களும் மக்கள் மனங்களைவிட்டு மறையாது அவர்களை ஊக்கிக்கொண்டேயிருக்கின்றன.

நற்றவப்பயனாக நமக்கு வழி காட்டக்கூடிய மகான்கள் இக்காலத்திலும் இருக்கிறார்கள். அத்தகைய பெரியார்களில் தலைசிறந்து விளங்குபவர் மகாத்மா காந்தி என்பதை அனைவரும் ஒப்புக்கொள்வர். அவர் சத்தியத்தையும் அஹிம்சா தர்மத்தையும் அடிப்படையாகக்கொண்டு நமக்கு மட்டுமல்ல; உலகமுழுவதுக்குமே சேவைசெய்து வருகிறார்.

மகாத்மா காந்தியின் இவ்வுயரிய தத்துவங்களைப் பின்பற்றி நடப்பவர்கள் பலரிருக்கின்றனர். நம் தமிழ் நாட்டைப் பொறுத்த மட்டில் காந்தியடிகளை முழுதும் பின்பற்றி

நடப்பவர்களில் ஸ்ரீஜத் சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் தலை சிறந்தவராவர் என்று கூறின் மிகையாகாது. ஸ்ரீஜத் ஆச்சாரியார் பொது வாழ்விலும், அரசியலிலும் ஈடுபட்டதிலிருந்து பால கங்காதர திலகருக்குப்பிறகு, காந்தியடிகளையே தமது ஆதர்ச புருஷராகக் கொண்டு தாய் நாட்டுக்கும், மக்களுக்கும் தொண்டாற்றி வருகிறார். மகாத்மாகாந்தி எவ்விதம் தமது சுகபோகங்களையும்,செல்வம்முதலிய சிறப்புகளையும் சர்வசங்கப் பரித்தியாகஞ் செய்துவிட்டு பொதுவாழ்வையே பெரிதாகக் கொண்டாரோ, அதுபோலவே, நமது ஆச்சாரியாரும் தமது ஆடம்பர வாழ்வையும், செல்வச் சிறப்பையும் ஒருகணத்தில் உதறித் தள்ளிவிட்டு, பொதுநலத் தொண்டாற்ற முனைந்து விட்டார். அவரது தன்னலமற்ற சேவையும், தியாகச் செயல்களுமே, இன்று அவரை ஒப்புயர்வற்ற தலைவராக்கி யிருக்கின்றன என்று துணிந்து கூறலாம். சுமார் பதினைந்து வருஷங்களுக்கு முன் சட்டசபைப் பிரவேசங் கூடாதென்று ஸித்த ரஞ்சன தாஸரோடு போராடிய ஆச்சாரியார் இன்று சட்டசபையில் புகுந்து பிரதம மந்திரி பதவியையும் வகித்து அரசியலை நடத்திவருகிறாரென்றால் அது அவரது தியாகத்தின்வெற்றியென்றே கூறவேண்டும். இன்று தமிழ் நாட்டில் எத்தனையோ இராஜகோபா லாச்சாரியார்கள் இருந்தும், இராஜகோபாலாச்சாரியார் என்றவுடனே இவரது உருவமே நம் முன்னின்று இவரையே ஞாபகப்படுத்துகிறதென்றால், இராஜகோபாலாச்சாரியார் என்ற பெயர் இவர் ஒருவருக்கே உரிய சிறப்புப்பெயராய் விளங்குகிறதென்றால், அது அவரது தியாகத்தின் உயர்வை விளக்க சிறந்த உதாரணமன்றோ ! ஆகவே; நம் நாட்டிற்கே பெரும் புகழையும் உயர்வையுந் தேடித்தந்திருக்கும் இப்பெரியாரது வாழ்க்கை வர

லாற்றை, தமிழ் மக்களாகிய ஒவ்வொருவரும் அறிந்து கொள்ளவேண்டியது-அறிந்திருக்கவேண்டியது-இன்றியமை யாதது என்பதை நாம் தெரிவிக்கவேண்டியதில்லை. அந் நோக்கத்தோடு தான், நமது ஒப்பற்ற தலைவரும், தியாகியு மான ஆச்சாரியாரது வாழ்க்கை வரலாற்றை எழுத முற் பட்டேன்; ஆதலால், தாய் நாட்டுச் சகோதர சகோதரிகள் நம் தலைவர் ஆச்சாரியாரின் இச்சரிதத்தை ஆர்வத்தோடு வாசிப்பார்களாக.

---

## முதலாவது இயல்.

### ஆச்சாரியார் தோற்றம்.

ஸ்ரீஜத் இராஜகோபாலாச்சாரியார் 1879-ம் வருடத்தில் சேலம் ஜில்லாவின் கண்ணுள்ள ஒசூரைச் சேர்ந்த ஒருசிறு கிராமத்தில் பிறந்தார். அவர் உதித்த குடும்பம் ஒரு நல்ல வைதீக குடும்பம். நல்லான் சக்கரவர்த்தி பரம்பரை யென்றால், வைஷ்ணவ ஐயங்கார் மரபிலேயே மிக உயர்ந்த குடும்பம் என்று பெயர் பெற்றது. ஆச்சாரிய பீடத்தமர்ந்து தம்மரபினர்க்கே யல்லாது, மற்றவர்களுக்கும் ஞானோபதேசஞ் செய்யக்கூடிய தகுதி, நல்லான் சக்கரவர்த்தி மரபில் வந்தவர்களுக்கே சிறப்பாக உரியதாகும். அத்தகைய பிரக்கியாதியும், பழம்பெருமையும் வாய்ந்த உயர்குடித் தோன்றலார் நம் ஆச்சாரியார். அவர் சிறுவயதில் உள்ளூர் பாடசாலையில் கல்வி பயின்றார். பிறகு உயர்தர கல்விக்காக, பெங்களூர் சென்டிரல் கலாசாலையிலும், சென்னை பிரஸிடென்ஸி கலாசாலையிலும் முறையே சேர்ந்து வாசிக்

கலானுர். அவர் சென்னை பிரஸிடேன்ஸி கலாசாலை யில் பி. ஏ. பரீக்ஷையில் தேரிப் பட்டம் பெற்றதும் சட்ட கலாசாலையில் சட்ட பரீக்ஷைக்காகப் படித்து வந்தார். அச்சமயம், அவர் சேலத்தில் பெற்றோரை யும் உற்றோரையும் விட்டுத் தனித்துப் படித்து வந்த தால், மாணவர் விடுதியில் தங்கியிருக்க நேர்ந்தது. அவர் வதிந்து வந்த மாணவர் விடுதி இப்போது வித வைகள் ஆசிரமமாக இருந்துவரும் ஐஸ் ஹவுஸ் கட்டிடமாகும்.

ஆச்சாரியார் அவ்விடுதியில் தங்கிச் சட்ட கலாசாலை யில் வாசித்து வருகையில், வேதாந்த கேசரியான சுவாமி விவேகானந்தர், டாக்டர் நஞ்சுண்டராவ், அளகிரிசிங்க ஆச் சாரியார் முதலிய சென்னைப்பிரமுகர்களால் வரவேற்கப்பட் டார். சுவாமிகள் சென்னைமாநகருக்கு விஜயஞ்செய்து பல இடங்களிலும் வேதாந்த பிரசங்கங்களைச் செய்துவந்தார். சுவாமிகள் சென்னையில் இருக்கும்வரை நமது ஆச்சாரியார் வதிந்து வந்த மாணவர் விடுதியில் தான் தங்கியிருந்தார். ஆதலால், ஆச்சாரியாருக்குச் சுவாமி விவேகானந்தரின் கூட் டுறவு ஏற்பட்டது. இயற்கையிலேயே நுண்ணறிவும், கடவுள் பக்தியும், பெரியோர்களிடத்து அத்யந்த விசுவாசமும் கொண்டுள்ள ஆச்சாரியார், சுவாமிகளிடம் அளவு கடந்த பக்தி கொண்டதும், சுவாமிகளின் அன்பைப் பெற்றதும் ஆச்சரியமாகாது. சுவாமிகளின் தொடர்பால் ஆச்சாரியா ருக்கு இளமையிலேயே இருந்துவந்த தேசபக்தியும், தியாக உணர்ச்சியும் அதிகரித்தன.

ஆச்சாரியார் பி. எல். பட்டம் பெற்ற பின்னர், தமது சொந்த ஊருக்குத் திரும்பிச்சென்றார். பிறகு அவர் சேலம்

நகரில் வக்கில் தொழிலை ஆரம்பித்தார். இதனிடையே, நமது ஆச்சாரியாருக்கு அவரது பெற்றோர் ஒரு வாழ்க்கைத் துணைவியைத் தேடித் திருமணஞ் செய்து வைத்தனர்.

“மங்கலம் என்ப மனைமாட்சி மற்றுஅதன்
நன்கலம் நன்மக்கட் பேறு.”

என்று திருவள்ளுவ நாயனார் அருளியதற் கிணங்க, ஆச்சாரியார் இல்வாழ்க்கையை இன்பவாழ்க்கையாக நடத்தி வந்ததோடு, முறையே நன்மக்களையும் பெற்றார். அவர் மூன்று குமாரர்களுக்கும், இரு புதல்விகளுக்கும் தந்தையானார். இவர்களில் மூத்தபுதல்வர் கிருஷ்ணசாமி என்பவர் “இந்து” பத்திரிகாலயத்தில் உதவியாசிரியராக இருந்து வருகிறார். இரண்டாவது குமாரரான இராமசாமி என்பவர் ஆமதாபாத்தில் “பிர்லா சணல் தொழிற்சாலை”யில் மெடிகல் ஆபீஸராக வேலைபார்த்து வருகிறார். மூன்றாவதுகுமாரரான நரசிம்மன் இதுவரை சேலத்திலேயே இருந்துவந்தார். புதல்விகளில் மூத்தவரை இரங்கூனில் டாக்டர் வேலை பார்த்து வந்த ஒருவருக்கு விவாகஞ் செய்வித்தார். ஆயினும், துரதிர்ஷ்டவசமாகச் சிறிதுகாலத்துக் கெல்லாம் ஆச்சாரியாரின் முதல் மாப்பிள்ளையான அவர் மரணமடைந்தார். அதே துக்கத்தினால் தான் போலும் அவ்வம்மையார் நோய்வாய்ப்பட்டார். இச்சம்பவம் ஆச்சாரியாரை வெகுவாகப் பாதித்து விட்டதென்றே சொல்லவேண்டும். அவர் மிகுந்த துயரத்துக்காளானார். நீண்டகாலம் தந்தையாரோடு இருந்து வந்த விதவையான அவ்வம்மையார் இப்போது மதனபள்ளியில் வசித்து வருகிறார்.

இளையபுதல்வி ஸ்ரீமதி லக்ஷ்மியோ் உலகம் போற்றும் உத்தமரான மகாத்மா காந்தியின் மருமகளாகும் பேற்றைப் பெற்றார். அப்பெண்கள் திலகம் தேவதாஸ் காந்திக்கு

உகந்த மனைவியாய் அமைந்து வாழ்க்கையை மேன்மையாக நடத்தி வருகிறார்.

---

## இரண்டாவது இயல்.

### வக்கீல் தொழில்.

நமது ஆச்சாரியார் வக்கில் தொழிலை மேற் கொள்ளத் தொடங்கியபோது, சேலம் நகரில் அச்சமயம் பிரபல வக்கிலாய் விளங்கி வந்த ஒரு கனவானின் கீழ் ஜூனியர் வக்கிலாய் இருந்து அத்தொழிலில் நன்கு பயிற்சிபெற அவரை அநுமதி கேட்டார். அதற்கு அவ்வக்கீல் கனவான் இசையவில்லை. ஆகவே, ஆச்சாரியார் தாமாகத் தனித்து நின்றே வக்கில் தொழிலை நடத்தத் தொடங்கினார்.

தொழில் துவக்கத்திலேயே ஆச்சாரியாருக்கு ஒரு விநோதமான அநுபவம் ஏற்பட்டது. இவர் தம்மிடம் வந்த முதல் வழக்கை முன்னிட்டுக் கோர்ட்டில் ஆஜரானார். இவ்வழக்கின் எதிர்தரப்பு சார்பாக முன் ஆச்சாரியாரைத் தமக்கு ஜூனியர் வக்கிலாக வைத்துக்கொள்ள விரும்பாத கனவானான பிரபல வக்கிலே தோன்றி வாதித்தார். ஆச்சாரியார் அப்பிரபலவக்கிலை எதிர்த்துஎவ்விதம்வாதிப்பதுஎன்று அச்சமடையாது, தம் கட்சியை எடுத்துக்கூறித் திறமையாக வாதித்தார். அதன் பயனாக, முடிவில் அவ்வழக்கில் இவரே வெற்றியடைந்தார். இம்முதல் வெற்றியே அவர் வக்கில் தொழிலை நடத்தி வந்தது வரை அழியாத கீர்த்தியையும், பெரும்புகழையும் தருவதற்கு அடிப்படையான காரணமாயிற்று. ஆச்சாரியாரது சட்ட ஞான நிபுணத்துவமும், அசைக்க முடியாத வாதத்திறமையும் வெகு சீக்கிரத்தில் பிரசித்தமடைந்தன. சில நாட்களுக்குள்ளேயே அவர் சேலத்திலுள்ள பிரபல வக்கில்களுக்குள் தலைமை ஸ்தானத்தைப் பெற்றார். அதிலும், ஆச்சாரியார் கிரிமினல் வழக்கு

களில் தான் அதிகமாக ஆஜராகிக் கட்சிக்காரர்களுக்கு வெற்றியை வாங்கித் தந்திருக்கிருர். இதனுல், இவருக்கு "கிரிமினல் லாயர்" என்று பெயர் வழங்கலாயிற்று. ஆச்சாரியாரின் வாதத் திறமையையும், சட்ட நுணுக்கங்களைத் தக்க இடங்களில் சரளமாக எடுத்துக் கையாளும் ஆற்றலையுங் கண்டு நீதிபதிகளே ஆச்சரியப்படுவர். அவ்வளவு ஏன்? எதிர்க்கட்சி வக்கீல்களே ஆச்சாரியாரது ஆணித்தரமான உதாரணங்களையும் அசைக்கமுடியாத வாதத்திறமையையும் நோக்கித் தங்கள் கட்சிகளை மறந்து இவரது பேச்சில் மயங்கி வாய் பிளந்து நிற்பரெனில் அதிகம் கூறவும் வேண்டுமோ!

ஸ்ரீஜத் ஸி. விஜயராகவாச்சாரியார் சேலத்தின் பிரபல தலைவர்களில் முக்கியமானவர்; அதுபோல் வக்கீல் துறையிலும் வெகு பிரசித்திபெற்றவர் என்பது அன்பர்கள் பலருக்குத் தெரிந்திருக்கலாம். அவர் ஆச்சாரியாரைவிட எத்தனையோ வருஷம் வயதிலும் அநுபவத்திலும் பெரியவர். ஆச்சாரியார் இளைஞரா யிருக்கும்போதே ஸ்ரீஜத் விஜயராகவாச்சாரியார் வக்கீல் தொழிலிலும் அரசியற் றுறையிலும், பொதுவாழ்விலும் பிரபல மடைந்திருந்தார். அத்தகைய பெரியாரிடம் ஆச்சாரியாருக்கு மிகுந்த மதிப்புண்டு. ஆயினும், கோர்ட்டில் ஒருவருக்கொருவர் நேருக்குநேர் வாதிக்க நேர்ந்து விட்டால், நம் ஆச்சாரியார் அவரையும் மிஞ்சவிட மாட்டார். ஒரே வழக்கில் ஸ்ரீஜத் விஜயராகவாச்சாரியார் ஒரு தரப்பிலும், நமது ஆச்சாரியார் மற்ருெரு தரப்பிலும் தோன்றி வாதிக்கத் தொடங்கி விடுவார்களானுல், அது ருசிகரமானதாகவும், வக்கீல்களுக்கெல்லாம் பெருவிருந்தாகவும் இருக்குமாம். ஸ்ரீஜத் விஜயராகவாச்சாரியாரது நீண்ட நாளைய வக்கீல் தொழில் அநுபவமும், உலகாநுபவமுதிர்ச்சியும் எல்லாம் நமது ஆச்சாரியாரது வாதத்திறமைக்கு

மூன் சோபிக்காது, ஆச்சாரியாரது வாதமே மேலோங்கி நிற்குமாம். சட்ட நுணுக்கங்களைச் சந்தர்ப்பத்திற்குத் தகுந் தபடி பிரயோகித்து தமது கட்சியே நியாயமானதென்று நீதிபதிகள் மனதிலும், ஜூரர் முதலிய மற்றவர்கள் மனங் களிலும் பதியும்படி எடுத்து வாதிப்பதிலும், தமது சாது ரியமிக்க பேச்சால் நீதிபதி முதலியவர்களை வசிகரிப்பதிலும் நமது ஆச்சாரியார் வெகு சமர்த்தர் என்று நேரில் கண்ட பலர் கூறுகிறார்கள். எனவே, அவர் இவ்வக்கீல் தொழிலில் மாதமொன்றுக்குச் சுமார் 2000-ரூபாய்க்குக் குறையாமல் சிரமமின்றிச் சம்பாதித்து வந்ததில் ஆச்சரியமில்லை யல்லவா !

நமது ஆச்சாரியார் சேலம் ஜில்லாவைச்சேர்ந்த குமார மங்கலம் ஜமீன்தார் டாக்டர் - சுப்பராயன் குடும்பத்து வக்கீலாயிருந்து வந்தார். அவ்வோதாவில் தான் ஆச்சாரி யாரது சகோதரரொருவர் மேற்படி ஜமீனில் மானேஜராக இருந்து வேலைபார்த்து வருகிறார். அதுவன்றி, சேலம் செல் வந்தர்களான திரு. இரத்தினசாமி கவுண்டர் முதலியபலருக் கும் இவரே வக்கீலாக இருந்து அவர்களுக்கேற்படும் வழக் கைத் தீர்த்து வெற்றியளித்து வந்தார். 1900 - வது ஆண் டில் வக்கில் தொழிலைத் தொடங்கிய ஆச்சாரியார் 1918 - வது ஆண்டுவரை சேலத்தில் நடத்தி வந்தார். 1919 - வது வருடத்தில் ஆச்சாரியார் சென்னைமாநகருக்கு வந்து இங்கு ஹைகோர்ட்டில் தமது தொழிலை நடத்தலானார்.

---

## மூன்றாவது - இயல்.

### சமூக சீர்திருத்த சேவை.

நமது இராஜகோபாலாச்சாரியார் இளமையிலேயே தீவி ரக் கொள்கைகளை யுடையவரா யிருந்தார். எவ்விஷயத்தை

யும் முன்னேற்றத்துக்கான முற்போக்கோடும் பரந்த நோக்கோடும் ஆராய்ந்து பார்க்கலானார். நம் இந்து சமூகத்தில் காணப்பட்ட சில மூடப்பழக்க வழக்கங்களையும், சீர்கேடுகளையுங் கண்டு மனம் வருந்தினார். ஆசாரம், அநுஷ்டானம், வைதிகம் என்பவற்றின் பேரால் நடைபெறும் அநாசார வழக்கங்களும், அருவருக்கத்தக்க பழக்கங்களும் அவருக்குச் சிறிதும் பிடிக்கவில்லை. கடவுள், சமயம் ஆகியவற்றின் பெயரால் நடைபெறும் அநீதிகளையும் கொடுமைகளையுங் கண்டு அவர் கண்ணீர் சிந்தினார். அர்த்தமற்ற ஜாதி வேற்றுமைகளையும், சமய வேற்றுமைகளையும் அறவே யொழித்து நமது சமூகத்தில் ஒற்றுமையையும், சமத்துவத்தையும், சகோதரத்துவத்தையும் உண்டாக்க வேண்டுமென்று உறுதிகொண்டார். நம் நாட்டில் பிறந்தவர்கள் "எல்லோரும் ஓர் குலம்; எல்லோரும் ஓர் இனம்; எல்லோரும் இந்நாட்டு மன்னர்" என்பதே அவரது அடிப்படையான கருத்தாகும்.

ஆகவே, இத்தகைய பரந்த நோக்கமும் விரிந்த மனப்பான்மையுங் கொண்ட நம் ஆச்சாரியார் தாம் தனித்து வாழ்க்கை நடத்தத் தொடங்கியதும் - வக்கீல் தொழிலில் சிறப்புற்றுப் பெரும்பொருள் சம்பாதிக்க ஆரம்பித்ததும் - தம் சீரிய கொள்கைகளைத் தாமே செயலில் நடத்திப்பிறருக்கு வழிகாட்டலானார். இந்து சமூகத்துக்கும் சமயத்துக்கும் பெருங்களங்கமாகவும், நீங்காக்கறையாகவும் இருக்கும் தீண்டாமையை யொழித்தால் தான் நமது சமூகமும், நாடும் விமோசனமடையும் என்று அவர் கருதினார். ஆதலால், மற்றெல்லாச் சீர்திருத்தங்களையும்விட, தீண்டாமை விலக்கை அவர் தமது முக்கிய தொண்டாகக் கொண்டார். மற்றவகுப்பினரைக் காட்டிலும் தாழ்த்தப்பட்ட மக்களுக்கே தம்மாலான உதவியைச் செய்து வந்தார்.

1906-வது வருடத்தில் நம் ஆச்சாரியார் சேலம் கலா சாலையில் ஆதித்திராவிட மாணவர் சிலரைச் சேர்க்க முயன்றார். இதைக்கண்டு உயர்வகுப்பினரெல்லாம் ஆர்ப்பாட்டஞ் செய்தனர். 'அவ் ஆதித்திராவிட மாணவர்களைச் சேர்த்து கொள்வதானால், எங்கள் மக்களைக் கல்லூரிக்கே அனுப்ப மாட்டோம்' என்று அவர்கள் பயமுறுத்தினர். கலாசாலை அதிகாரிகள் உயர்ஜாதியினரின் தீவிர எதிர்ப்பைக் கண்டு முதலில் பயந்து தயங்கினரெனினும், கடைசியில் ஆச்சாரியார் பக்கலில் நியாயமிருப்பதை யுணர்ந்து அவரது அந்நன் முயற்சிக்கு ஆதரவுதந்தனர். முதலில் ஆதித்திராவிடமாணவர்களுக்கு உதவிசெய்ய வேண்டுமென்று இவ்வித முயற்சியில் ஈடுபட்டாலும், பின்னர் உயர் வகுப்பினர் பெருங் கிளர்ச்சி செய்யத்தொடங்கியதைக் கண்டதும், வேறொருவராயிருந்தால் பயந்துபோய், 'நமக்கு ஏன் இந்த ஊர்ப்பொல்லாப்பு' என்று மெல்லப் பின் வாங்கி யிருப்பர். திடசித்தமுள்ள ஆச்சாரியாரோ உயர்ஜாதியாரது தீவிர எதிர்ப்பைக் கண்டு சிறிதும் அஞ்சாது கடைசிவரை அவர்களோடு இவ் விஷயமாகப் போராடி, தாம் நல்லதென்று செய்ய நினைத்த காரியத்தைச் சாதித்து வெற்றியை நிலை நாட்டினார். இவரது இத்தகைய பெருமுயற்சியால்கலாசாலையில் சேர்த்துக்கொள்ளப்பட்டஆதித்திராவிடமாணவர்கள் ஆச்சாரியாரை மனமார வாழ்த்தியிருப்பர் என்பதைக் கூறவும் வேண்டுமோ! ஆயினும், உயர் வகுப்பார் அத்துடன் நிற்கவில்லை. பிராம்மணர்களெல்லாம் நமது ஆச்சாரியாரை ஜாதிப்பிரஷ்டஞ் செய்தனர். வீண்பிடிவாதங்கொண்டவர்கள் தங்கள் முயற்சியில் தோல்வியுற்றால் ஆத்திரமடைவது இயல்பேயன்றோ! தேசபக்தியும், சீர் திருத்த உணர்ச்சியும் மிகுந்துள்ள இக்காலத்திலேயே - காலச்சக்கிரகத்தின் வேகத்தால் பலவகையினும்

பெருமாறுதல் ஏற்பட்டிருக்கும் இக்காலத்திலேயே பல கிராமங்களில் - ஏன் சில நகரங்களில்கூட - ஜில்லா போர்டு பள்ளிக்கூடங்களிலோ, கார்ப்பொரேஷன் பாடசாலைகளிலோ, சர்க்கார் உயர்தர பள்ளிக்கூடங்களிலோ தாழ்த்தப்பட்ட வகுப்பு மாணவர்களைச் சேர்த்துப் படிக்க வைத்தால், தங்கள் பிள்ளைகளை அனுப்பமாட்டோம் என்று உயர் வகுப்பினர் கிளர்ச்சிசெய்து வருவதை நாம் கண்டுங் கேட்டும் வருகிறோம். இவ்விதக் கிளர்ச்சிகளின் பயனாக, பல பள்ளிக்கூடங்கள் மூடப்பட்டதையும் அநேகர் அறிந்திருக்கலாம். ஆகவே, 1906 - வது வருடத்தில் உயர்குலத்தினர் என்போரின் மனப்பான்மையும், கிளர்ச்சியும் எவ்விதமிருந்திருக்குமென்பதை நாம் ஊகித்துப்பார்த்தால் ஆச்சாரியார் அக்காலத்தில் சாதித்த அச்செயலின் அருமையும் பெருமையும் நன்கு விளங்கும்.

---

## நான்காவது இயல்.

### வைதீகர் எதிர்ப்பு - சமூகப்பகிஷ்காரம்.

இதேவிதமான போராட்டம் 1917 - வது ஆண்டில் ஆச்சாரியார் சேலம் நகரசபைத் தலைவராக இருந்தபோது மீண்டும் ஏற்பட்டது. நகரசபையின் மேற்பார்வைக்குட்பட்ட தண்ணீர்க்குழாய்களை அவ்வப்போது திறந்து மூடுவதற்கு வேலைக்காரர்கள் பலர் நியமிக்கப்பட்டிருந்தனர். அவர்களில் ஆதித்திராவிட இளைஞர்களும் இருந்தனர். இஞ்சினீயர் ஸ்ரீ ஏ. வி. ராமன் (இப்போது அவர் சென்னை சர்க்கார் காரியாலயத்தில் பெரிய உத்தியோகம் வகித்து வருகிறார்.) இந்த ஆதித்திராவிட இளைஞர்களைத் தற்செயலாக அக்கிராகாரத்திலுள்ள தண்ணீர்க்குழாய்களைக் கவனிக்கும்படி மாற்றினார். அக்கணமே அக்கிரகாரத்தில் வசிக்கும்

ஆட்சேபிக்கவில்லை. ஆனால், ஹாஸ்டலில் அவர்களை வைக்க வேண்டாமென்றே கேட்டுக்கொள்ளுகிறோம். அவர்கள் தொடும் பொருள்களை உயர்வகுப்பு மாணவர்கள் சாப்பிடு வார்களா என்று யோசித்துப் பாருங்கள். நீங்கள் இவ்விஷ யத்தில் இனியும் பிடிவாதஞ்செய்தால் உயர் வகுப்பினர் அதிலும் பிராம்மணர்கள் கலாசாலை ஹாஸ்டலைப் பகிஷ் கரிக்க வேண்டிவரும்" என்று நயமாகவும், பயமாகவும் வற் புறுத்தி வேண்டிக்கொண்டதாகவும், இதுவரை யாவற்றை யும் அமைதியாகக் கேட்டுக் கொண்டுவந்த ஆச்சாரியார் புன் சிரிப்போடு, "ஹாஸ்டலைத்தானே பகிஷ்கரிக்கப் போகிறீர் கள்? உங்கள் விருப்பப்படியே செய்யலாம். ஹாஸ்டலைப் பகிஷ்கரிக்கும் மாணவர்களைக் கலாசாலையிலிருந்து நான் பகிஷ்கரித்து விடலாமல்லவா?" என்று கூறியதாகவும், இப் பதிலைக்கேட்டு கிளர்ச்சிக்காரர்கள் வேறு மாற்றம் உரையாது வெட்கித் தலைகுனிந்து சென்றதாகவுங் கூறப்படுகிறது. இவ்விதச் செய்திகளிலிருந்து ஆச்சாரியார் தாழ்த்தப்பட்ட சமூகத்தைச் சேர்ந்த மக்களின் உரிமைக்காகவும், சமத்து வத்துக்காகவும் வெகு தூரம் பாடுபட்டு வந்திருக்கிறார் என்று நன்கு தெரிகிறதல்லவா! ஆச்சாரியர் சேலம் சேர்ம னாக இருந்தவரை, முனிசிபாலிடியிலும், மற்றும் தம் நிர் வாகத்திற் குட்பட்ட ஸ்தாபனங்களிலும் ஆதித்திராவிட சகோதரர்களுக்கு வேலை செய்து வைத்திருக்கிறார். ஆதித் திராவிட மாணவர்களுக்குப் புத்தகங்கள் வாங்கிக் கொடுத் துதவினார். அது வன்றி, மற்ற சமூகத்தாரைக் காட்டிலும், ஆதித்திராவிடமக்களே மதுபான பழக்கத்தால் கஷ்டமும் நஷ்டமும் அடைந்து கெட்டொழிகிறார்கள் என்று ஆச்சாரி யார் உணர்ந்து, தாம் முனிசிபல் சேர்மனாயிருந்த காலத் திலேயே மதுபானக்கடைகளைஎல்லாம் அறவே எடுத்துவிட

முயன்ருர். சர்க்கார் நிர்வாகத்திற் குட்பட்ட கலால் இலாகா விஷயமாதலால், ஆச்சாரியாரது இந்நன்முயற்சி எதிர் பார்த்த அளவு பலன்தரவில்லை. ஆனாலும் அவர் மதுபானக் கடைகளையெல்லாம் சேலம் நகருக்கு வெளியே - ஊருக்குக் புறம்பே - கொண்டுபோகும்படி செய்து விட்டார்.

இத்தருணத்தில் தான் சுவாமி சகஜானந்தர் ஏதோ காரியார்த்தமாகச் சேலத்துக்கு விஜயஞ்செய்தார். ஜனசமூகத்திலேயே மிகவுந்தாழ்த்தப்பட்டுக் கேவலநிலையிலிருக்கும் ஆதித்திராவிட மக்களைப் பலவகையிலும் உயர்வடையச் செய்ய அல்லும் பகலும் பாடுபட்டுவரும் நமது ஆச்சாரியார், அச்சமூகத்திலும் ஒருவர் தமிழும் சமஸ்கிருதமும் நன்கு பயின்று, சந்நியாசியாயிருக்கிருர் என்று அறிந்தால் எவ்வளவு மகிழ்ச்சிகொண் டிருப்பார்? மேலும், அந்த ஆதித்திராவிடத்துறவி, தம்சமூக உயர்வுநாடி, சிறுவர் சிறுமியர்களுக்குக் கல்வி புகட்டுவதற்காக, சிதம்பரத்தில் நந்தனர் கழகமென்று ஒரு பாடசாலையையும் ஹாஸ்டலையும் நடத்திவருகிருர் எனத் தெரிந்ததும், நம் ஆச்சாரியார் சுவாமி சகஜானந்தரின் நன் முயற்சிக்குப் பேராதரவுதந்து, தக்க சமயங்களில் பொருளுதவியுஞ் செய்து வந்திருக்கிருர். இவ்விதம், ஏற்கனவே அறிமுகமான சுவாமி சகஜானந்தர் 1917 - வது வருஷத்தில் சேலத்துக்கு வந்ததும், ஆச்சாரியார் அவரை ஆர்வத்தோடு வரவேற்று உபசரித்தார். அத்துடனில்லாது, நம் ஆச்சாரியார் தமது அத்யந்த நண்பர்களில் ஒருவரான வக்கீல் ஸ்ரீ ஸி. அனந்தாச்சாரியாருடைய மாளிகையில் சுவாமி சகஜானந்தருக்கு ஒருவிருந்து ஏற்பாடு செய்தார். அச்சமபந்தி விருந்தில் ஸ்ரீமான்கள் பாரிஸ்டர் - ஆதிநாராயணஞ் செட்டியார், ஸி. அனந்தாச்சாரியார், டாக்டர் வரதராஜுலு நாயுடு, சேலம் கலாசாலை பிரின்ஸிபால் எக்ஞ

நாராயண ஐயர் எம். ஏ. எல். டி., (தற்போது இவர் சென்னையப்பன் கலாசாலையில் ஆங்கிலப் பேராசிரியராக இருந்து வருகிறார்.) பாரிஸ்டர் டி. எஸ். ஜகராஜ், எஸ். வி. சுப்பிரமணிய ஐயர் முதலிய முக்கிய பிரமுகர்க ளெல்லாங் கலந்து கொண்டனர். ஆச்சாரியாரது அத்யந்த சிநேகிதர்களில், அவரது சமூக சீர்திருத்த வேலைகளுக்கும், தீண்டாமை யொழிப்பு வேலைக்கும் ஆதியிலிருந்து பேரா தரவு அளித்து வந்தவர்கள், பாரிஸ்டர் - ஆதிநாராயணஞ் செட்டியார், எக்ஞ நாராயண ஐயர், வி. அனந்தாச்சாரி யார், எஸ். வி. சுப்பிரமணிய ஐயர் ஆகியோர் குறிப்பிடத் தக்கவர்களாவர். சென்னை சட்டசபை அங்கத்தினராயிருந்த ஸ்ரீ பி. வி. நரசிம்ம ஐயரும் ஆச்சாரியாரது சமூகசீர்திருத்த வேலைக்கு ஆதரவளித்து வந்தாராயினும், ஆச்சாரியார் செய்யுஞ் செயல்களில் மிகத்தீவிரமென்று அவர்கருதிய சில நிகழ்ச்சிகளை மட்டும் ஆதரிக்க முன்வராது ஒதுங்கியிருந்து வந்தார். சேலம் பெருங்கிழவர் ஸ்ரீஜத் - விஜய ராகவாச் சாரியாரோ தாம் பழைய வைதீக தருமப் போக்கை யநுஷ் டித்து வந்தாலும், நம் ஆச்சாரியார் செய்துவரும் சமூகசீர் திருத்தச் செயல்கள் நியாயமானவையெனவே அவருக்குப் பட்டதால், அவற்றிற்கு ஆதரவு காட்டிவந்தார்.

சேலம் நகரசபை சம்பவத்துக்குப் பிறகு அதை யொட்டி நடந்த இச்சமபந்தி விருந்து எரிகிற நெருப்பில் நெய்விடுவதுபோல் ஆயிற்று. உயர் வகுப்பினரிடையே இது மீண்டும் மனக்கொதிப்பை யுண்டுபண்ணியது. சேலம் பிராம்மணர்களும், மற்ற உயர் ஜாதியினரும் ஆச்சாரியார் மீதும், அவரது தோழர்கள் மீதும் அடங்காக் கோபங் கொண்டனர். 1906 - வது வருடத்தில் சேலம் கலாசாலை யில் ஆதித்திராவிட மாணவர்களைச் சேர்த்ததற்காகப்பிராம்

மணர்கள் ஆச்சாரியாரைச் சமூகப்பகிஷ்காரஞ் செய்தனர் என்று முன் கூறினேமல்லவா! நாளடைவில், அவர்கள் அதை நழுவவிட்டு, ஆச்சாரியாரோடு உறவு கொண்டாடி வந்தனர். ஆதித்திராவிடரான சுவாமி சகஜானந்தரை வரவேற்று உபசரித்தது மட்டுமன்றி, அவரோடு சமபந்தி போஜனஞ் செய்ததை அறிந்ததும், அவர்கள் ஆச்சாரியாரையும் அவருடைய மேற்படி செயலை ஆதரித்து நின்ற அவரது நண்பர்களையும் சமூகப்பகிஷ்காரஞ் செய்தனர். இந்த முறை அவர்கள் சமூகப்பகிஷ்காரத்தைக் கடுமையாக அநுஷ்டித்து வரலாயினர். ஆகவே, ஆச்சாரியாரது கோஷ்டியார் விவாகம் முதலிய சுபமுகூர்த்தங்கள், மரணச் சடங்குகள், சிரார்த்தங்கள் ஆகியவைகளை நடத்தி வைப்பதற்கு அவசியமான மந்திரங்களையெல்லாம் பயின்றனர். அவசியம் நேர்ந்தபோது இவர்களே ஒருவருக்கொருவர் உதவியாக இருந்து சடங்குகளை நடத்திவைத்து வந்தனர்.

இச்சமபந்தி விருந்துக்குப்பிறகு அவ்விருந்தில் கலந்து கொண்ட ஸ்ரீ. எஸ். வி. சுப்பிரமணிய ஐயரது சகோதரியார் இறந்து விட்டார். ஜாதியார் மட்டுமல்ல; நெருங்கிய உறவினர்கூட, இச்சாவுக்கு வராது பகிஷ்கரித்து விட்டனர். 'நாமெல்லாம் இல்லாது இக்காரியம் எப்படி நடக்கிறது; பார்க்கலாம்' என்று எல்லோரும் வேடிக்கை பார்த்திருந்தனர். அச்சமயம் ஆச்சாரியார் ஊரிலில்லை. ஆயினும் ஸ்ரீ வி. அனந்தாச்சாரியார் முதலிய நண்பர்கள் பிரேத அடக்கத்துக்கு வேண்டிய உதவிகள் செய்தனர். ஸ்ரீ எக்ஞ நாராயண ஐயரே இறுதிச்சடங்கை நடத்திவைத்தார். தங்களிடம் மன்னிப்பு கேட்டுக்கொண்டு தங்கள் உதவியை நாடி வருவார்களென்று மனப்பால் குடித்திருந்த பிராம்மணர்கள் இதைக் கண்டு வெட்கித் தலை குனிந்தனர்.

2

நமது ஆச்சாரியார் சுவாமி சகஜானந்தருக்கு விருந்து நடத்தி அவருடன் சமபந்தி போஜனஞ் செய்த விஷயம், ஒசூருக்குப் பக்கத்தூக் கிராமத்தில் தமது முதிய வயதை யுத்தேசித்து அமைதியாகக் காலங்கழித்து வந்த அவரது தகப்பனுருக்கு எட்டியது. ஆச்சாரியாரது நுண்ணறிவை யும், நல்லொழுக்கத்தையும் மற்றவர்களைவிட நன்குஅறிந்து வைத்திருந்த அவருடைய தகப்பனர் 'தன் மகன் தவறான வழிக்குச் செல்லமாட்டான்' என்று உறுதியாக நம்பி யிருந் தார். ஆதலால், ஆச்சாரியார் அவ்வப்போது செய்துவரும் புரட்சிகரமான காரியங்களைப் பற்றி யாராகிலும் தெரி வித்தாலும் அவர் தன் மகன் செய்வது நியாயமான தாகவே இருக்கும் என்று திருப்திகொண்டு வந்தார். சந்நியாசியா யிருந்தாலும் ஜாதியில் ஆதித்திராவிடராயுள்ள ஒருவரோடு சமமாக உட்கார்ந்து போஜனஞ்செய்த விஷயம் அவரால் கேட்டு சகிக்க முடியாததாய்ப் போய் விட்டது. எனவே, அவர் மிகவும் வருத்தத்தோடு தம் அருமை மைந்தனுக்கு இவ்விஷயமாக ஒரு கடிதம் எழுதினர். அதற்கு ஆச்சாரி யார் மிக வணக்கமாகப் பதில் விடுத்தார். அப்பதிலில், தம் மூதாதையரில் ஒருவர் செய்த இதுபோன்ற காரியமொன் றை ஞாபகமூட்டி, அவரைப் பின்பற்றியே தாம் நடந்து கொண்டதாக நயமாக எடுத்துக்காட்டியிருந்தார். அதாவது, நமது ஆச்சாரியாருடைய மூதாதைகளில் ஒரு பெரியார் ஆற்று வெள்ளத்தில் அடித்துக்கொண்டு வரப்பட்ட இரு அநாதைப்பிணங்களுக்கு இறுதிச்சடங்குகளைச்செய்து தக னஞ் செய்ததாகவும் 'அநாதைப் பிணங்களான அவை எந்த ஜாதியைச் சேர்ந்தனவோ! அவைகளைப் பற்றித் தீர விசாரித்தறியாமலே. தீண்டி இறுதிச்சடங்குகளைச் செய்த தனல் நீ சண்டாளத்துவத்தை யடைந்து விட்டாய்' என்று

கூறி இனத்தார் அவரைச் சமூகப் பகிஷ்காரஞ் செய்து விட்டதாகவும், அவரது தகப்பனார் சிரார்த்தம் வந்தகாலத்தில் எப்பிராம்மணரும் வர மறுத்து விட்டதாகவும், எனவே, இறைவனை நோக்கி மனமுருகி நிற்கையில் கருணாகர மூர்த்தியான ஸ்ரீ மகா விஷ்ணுவே பிராம்மணனாக வந்து சிரார்த்தத்தை நடத்திவைத்ததாகவும், கடைசியில் தன் உண்மை உருவத்தை வெளிக்காட்டி 'ஊருக்குப் பொல்லான், எனக்கு நல்லான்' என்று திருவாய் மலர்ந்தருளி மறைந்ததாகவும் கர்னபரம்பரையாக ஒரு வரலாறு வழங்கி வருகிறது. அன்று தொட்டுதான் ஆச்சாரியார் குடும்பத்துக்கு 'நல்லான் சக்கரவர்த்தி' என்ற பட்டப்பெயர் பரம்பரையாக வழங்கி வருகிறதாம். குலதர்மத்தை ஆச்சாரியார் எடுத்துக் காட்டிய பிறகு தந்தையார் என்ன கூறமுடியும்? அதற்கு மேல் அவர் ஒன்றுங் கூறாமல் இருந்து விட்டார்.

இவ்விதம் நம் ஆச்சாரியார் தம் வாழ்க்கையிலேயே சமூக சீர்திருத்தத்துக்கு அடிகோலி வந்ததோடு, சமயம் நேர்ந்த போதெல்லாம் பிறருக்கும் அறிவுறுத்தி வந்தார். அத்துடன் அவர் நிற்கவில்லை. சமூகசீர்திருத்தத்தில் ஆர்வமுள்ள மற்றவர்களோடு கலந்து நம் சமூக உயர்வுக்கான ஆக்கவேலைகளைச் செய்து வரலானார். 1914-வது வருடத்தில் திருச்சினாப்பள்ளியில் சமூக சீர்திருத்த மகாநாடு ஒன்று நடைபெற்றது. அம்மகாநாட்டு நிர்வாகிகள் நம் ஆச்சாரியாரையே தலைவராகத் தேர்ந்தெடுத்தார்கள். ஆச்சாரியார் தமது தலைமைப்பேருரையில், "நம் இந்து சமயத்தை விட்டு ஜாதி வேற்றுமை ஒழியவேண்டும். அதை அறவே ஒழிப்பதையே நமது முதற்கடமையாகக்கொள்ளவேண்டும். அச்சாதி வேற்றுமை வேரூன்றியிருக்கும் வரையில் நம்

நாடும், சமூகமும் முன்னேற்ற மடையா என்பது திண்ணம்'' என்று குறிப்பிட்டு வீரமுழக்கஞ் செய்தார்.

ஜாதிச் சங்கங்கள், ஜாதி மகாநாடுகள் நடப்பது ஆச்சாரியாருக்குச் சிறிதும் பிடிக்காது. இவ்வித சங்கங்களும், மகாநாடுகளுமே ஜாதிப்பிரிவுகளை ஊர்ஜிதப்படுத்தி வருகின்றன என்பது ஆச்சாரியாருடைய கருத்து. இவ்வித அபிப்பிராயமுடையவராயிருந்தும், ஆச்சாரியார் சேலத்திலுள்ள கொங்குவேளாள சமூகத்துக்கு வெகுவாக வேலைசெய்தார். அச்சமூக உயர்வு நாடி யுழைக்கும் நண்பர்களுக்குத் தக்க யோசனை கூறி வந்தார். அதுமட்டுமா ! அவர்கள் நடத்தும் சங்கங்கள், மகாநாடுகளில் அவர் கலந்து கொள்ளலானார். மகாநாடுகளின்போது ஆச்சாரியார் 'கள் குடிக்கக்கூடாது' என்று வற்புறுத்தியும், ஜாதிபேதங்களை அகற்றுவதற்கு அநுகுணமாகச் சமபந்தி போஜனஞ்செய்யும்படி வேண்டியும் பல அரிய பிரசங்கங்கள் செய்தார். அவரவர் போக்கில் அவரவரை முதலில் விட்டு அவர்களோடு தாமும் போவது போல் காட்டி, பிறகு மெள்ள தம் வசப்படுத்திக் கொள்வதில் ஆச்சாரியார் வெகு சமர்த்தர். சமூகசீர்திருத்தவேலைகளில் சிறிதும் விருப்பமில்லாதவர்களையெல்லாம் ஆச்சாரியார் இவ்விதந்தான் திருப்பினர். தமது சமூகசீர்திருத்தக் கொள்கைகளை அவர் எல்லாத் துறைகளிலும், புகுத்தி வந்தார்; எவ்விடத்திலும் பரவச்செய்து வந்தார். அரசியல் போராட்டத்தில் தீவிரமாக ஈடுபட்டிருந்தபோது கூட அவர் தம் சீர்திருத்தக்கொள்கைகளை மறந்து விடவில்லை. உலகிலுள்ள ஜனசமுதாயங்களைப்போல், நம் பாரத சமுதாயத்தையும் உயர்த்தவேண்டுமென்பதில் ஆச்சாரியாருக்கு அளவிலா ஆர்வமிருந்து வந்ததே இவற்றிற்கெல்லாம் காரணமாகும்.

---

# ஐந்தாவது இயல்.

## ஆடம்பர வாழ்க்கை

ஆச்சாரியார் இளமையில் வெகு ஆடம்பரப்பிரியராய் இருந்தாரென்று தெரிகிறது. அவர் எப்போதும் டாம்பீகமாகவே மிக விலையுயர்ந்த ஆடைகளையே உடுத்துவார். ஒரு பெரிய பங்களாவில் வசித்து வந்தார். கோச் வண்டி, மோட்டார் கார் முதலியவைகளிலேயே செல்வார். அவருக்கும், அவரது குடும்பத்துக்கும் குற்றேவல் செய்வதற்குப் பணியாளர்கள் பலர் இருந்தனர். பெருஞ் செல்வர்களும், உயர் தகுதி வாய்ந்தவர்களும், சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் முதலியவர்களுமே இவருக்கு உற்ற நண்பர்களா யிருந்தனர். இவர் சேலம் 'மெஸானிக் லாட்ஜில்' சேர்ந்திருந்தார். அதில் இவர் ஒரு முக்கிய அங்கத்தினராகவும் இருந்து வந்தார். சேலம் கலெக்டரோடு (ஐரோப்பியர்) இவர் மெஸானிக் லாட்ஜுக்குப் பரஸ்பரமாகப் போவார். இவர் கலெக்டருடன் வெகு சகஜமாகப் பழகுவதும், அவர் ஆச்சாரியாரிடம் அதிக அன்பும் மதிப்புங் காட்டுவதும் பலருக்குப் பொறுமையை யுண்டு பண்ணிற்று. ஆச்சாரியார் இன்னமும் 'மெஸானிக் லாட்ஜ்' மெம்பராகவே இருந்து வருகிறார். ஆனால், 1935 - வது வருடத்தில் இவர் அரசியல் போக்கு காரணமாகச் சிலர் இவரை அங்கத்தினர் பதவியிலிருந்து நீக்க முயன்றனர். 'அரசியலில் தீவிரமாகவேலை செய்துவரும் இவர் 'மெஸானிக் லாட்ஜ்' மெம்பர்களோடு ஒத்துழைப்பது சாத்தியமாகாது; இவர் லாட்ஜின் இரகசியங்களைப் பிறருக்கு வெளியிட்டு விடக்கூடும்' என்றெல்லாம் பல மெம்பர்கள் வாதித்தனர். ஆனால் அவர்களது இம்முயற்சி பலனடையவில்லை.

ஆச்சாரியார் தமது வைதீகத் தகப்பனாருடன் அடிக்கடி கோச்சுவண்டியில் வெளியே செல்வார். பலமுறை அவர் காசாரியைப் பின்புறத்தில் இருக்கச்செய்துவிட்டு, தாமே சாரத்தியஞ் செய்துகொண்டு செல்வார். அச் சமயங்களில் அவர் தம் தகப்பனாரிடம் மரியாதையாகவும், நயமாகவும் சமூக ஒற்றுமையைப்பற்றியும், சமத்துவத்தைப் பற்றியும் கூறிச் செல்வார். வைதீகத்தில் ஆழ்ந்த பற்றுடையவராயினும், தருமகுணம் வாய்ந்த அவரது தகப்பனார் தம் அருமைப்புத்திரன் கூறுவனவற்றை யெல்லாம் அமைதியாகக் கேட்டுவருவாராம். சாதாரணமாகத் தம்மக்களின் அறிவற்ற மழலைச் சொற்களையே கேட்டு மகிழக்கூடிய நிலையிலுள்ள அவரது தந்தையார், தமது தவப்புதல்வனின் கூரிய அறிவையும் அருள் உள்ளத்தையுங் கண்டு கேட்டு விம்மிதமுறாதிருக்க முடியுமோ!

பெரும் பொருள் வருவாயுடைய ஆச்சாரியார் ஆடம்பர வாழ்க்கையை மேற்கொண்டதில் ஆச்சரியமொன்றுமில்லை. இவ்வளவு செல்வச்சிறப்பிலும் ஆடம்பர நிலையிலுங்கூட, மற்றவர்களைப்போலத் தருக்கித் திரியாது, தவறானவழிகளில் செல்லாது, தீய பழக்கங்களைக் கைக்கொள்ளாது இருந்தது தான் நாமெல்லாங் கண்டு ஆச்சரியமுறத் தக்கதாகும். அதற்கு அவரது நல்லறிவும், மனவுறுதியுமே காரணமாகும்.

செல்வமும், செல்வாக்கும், அதிகாரமும் உடையவர்களைக் கூடாவொழுக்கங்கள் வந்தடைவதற்குப் பல சந்தர்ப்பங்கள் இருக்கின்றன. ஆனால், நம் ஆச்சாரியாரை எவ்வித கூடாவொழுக்கமும் அண்டியதில்லை. அவர் சேலம் நகர சபைத்தலைவராயிருந்த காலத்திலும், 'மெஸானிக் லாட்ஜில்' மெம்பரா யிருந்து, ஐரோப்பிய கலெக்டர் முதலியவர்க

ளோடு பழகி வந்த காலத்தும் மதுபான பழக்கமுடைய வரா யிருந்தார் என்று சிலர் கூறுகிறார்கள். அதை நாம் நம்பு வதற்கில்லை. மதுபான பழக்கத்தை மக்களிடமிருந்து அறவே யொழித்துவிட வேண்டுமென்று ஆதியிலிருந்தே பாடுபட்டுவரும் ஆச்சாரியார் தாமே அப்பழக்கத்தைக் கொண்டிருப்பாரா என்று நாம் யோசித்துப் பார்க்கவேண் டும். ஆனால், ஆச்சாரியாரே சென்னைப் பிரதம மந்திரியாக வந்த பிறகு சமீபத்தில் சென்னை கிரிக்கெட் பந்தாட்ட ஆண்டு விழாவுக்குத் தலைமை வகித்துப்பேசுகையில், பெரும் பாலும் பந்தாடுபவர்களிடையே குடிப்பழக்கம் முதலிய தீய பழக்கங்களிருப்பதாகத்தாமறிவதாகவும், அக்கொடிய பழக் கத்தை அறவே ஒழித்து விடவேண்டுமென்றும், அதனால் பல தீமைகளிருக்கின்றன வென்றும் குறிப்பிட்டு வரும் போது, தாம் ஒருமுறை பரீக்ஷார்த்தமாக மதுபான வகை களை யுபயோகித்துப் பார்த்ததாகக் கூறியிருக்கிறார்.

"குடி பல குடித்தனங்களைக் கெடுக்கிறது. குடிப்பவனை யுங் கெடுக்கிறது. ஜனங்கள் குடிக்காமலிருக்க முடிவுசெய் தாலன்றி, மதுவிலக்கு மசோதாவைச் சட்டமாக்கி என்ன பயன் ?

"கீழ்ச்சபையிலும், மேல்சபையிலும் மதுவிலக்கு மசோதா சட்டமாகிவிட்டது; ஆனால் அது உங்கள் மேல் சபையில் (அதாவது மூளையில்) நிறைவேறினாலன்றிப் பிர யோஜனமில்லை."

"மதுபானத்தில் 'ஆக்ஸிஜன்' என்ற ஒருவித நஞ்சு சத்து இருக்கிறது. அதனால் தான் குடிப்பவர்களுக்குப் பல விதமான நோய்களுண்டாகின்றன. இது உங்களுக்கு எப்படி தெரியுமென்று நீங்கள் கேட்கலாம்; மதுபான வகைகளின்

தன்மைகளையும், அதனால் விளையுந் தீமைகளையும் அறிவதற்காகவே நான் ஒருமுறை - ஒரே ஒருமுறைதான் - குடித்திருக்கிறேன். அதற்குமேல் இல்லை."

மற்றவர்கள் கூறும் கூற்றுகளைவிட அவரது வார்த்தையையே நாம் நம்பலாமல்லவா! மதுபான பழக்கமேயன்றி, மற்ற கூடாவொழுக்கங்களும் ஆச்சாரியார் பால் சிறிதுங் கிடையாது. ஆடம்பர வாழ்க்கையிலும் டாம்பீகப் போக்கிலும் அவர் ஆழ்ந்திருந்தாலும் அவர் ஆரம்பத்திலிருந்து இன்று வரை பரிசுத்த வாழ்க்கையையே நடத்திவருகிறார் என்பது திண்ணம். அவரது ஆடம்பர வாழ்க்கைகூட, நடுத்தர வகுப்பைச் சேர்ந்த ஒரு கிருகஸ்தன் இருக்கவேண்டிய அளவு தான் இருந்தது.

நம் ஆச்சாரியார் சேலம் நகரசபையில் அங்கத்தினராகவும் தலைவராகவும் இருந்தபோது கூட வீண் ஆடம்பரங்களிலும், கேளிக்கை, விருந்துகளிலும் அதிகமாகக் காலத்தைக் கழித்ததில்லை; தம் அதிகாரத்தைத் துஷ்பிரயோகஞ் செய்ததில்லை. லஞ்சம் முதலிய ஊழல்களுக்குச் சிறிதும் இடங்கொடுத்ததில்லை. பொது நலத்தைக் காப்பதிலும் செய்வதிலும் அதிக கவனஞ் செலுத்தினாரேயொழிய தன்னலத்தைச் சிறிதுங் கருதியதில்லை. தம்மால் நகரத்துக்கும் நகர மக்களுக்கும் எவ்வளவு நன்மை செய்ய முடியுமோ அவ்வளவும் செய்துவந்தார். அவர் தலைவராயிருந்த காலத்தில் சேலம் நகரம் பலவகையிலும் சிறப்புறலாயிற்று. சேலம் நகரப் புனரமைப்புத் திட்டத்தை (Salem Extension Scheme) ஆச்சாரியார் தான் ஏற்படுத்தினார். நகரசபையில் அவர் ஆற்றிய அரும்பெருஞ்சேவையைப் பலரும் பாராட்டியிருக்கின்றனர். ஆச்சாரியார் எவ்வளவுக்கெவ்வளவு நுண்ணறிவுடையராயிருந்தாரோ, அவ்வளவுக் கவ்வளவு நிர்

வாகத் திறமையிலும் சிறந்து விளங்கினர். இவர் யுத்த நிதி னுக்காகச் சர்க்கார் சார்பில் பெரிதும் உழைத்திருக்கிறார். இவ்விஷயத்தில் இவர் வாயிலாகச் சர்க்காருக்குக் கிடைத்த பொருளுதவியைக் கண்டு அவ்வூர் கலெக்டரும், மற்றும் பிரமுகர்களும் இவரை வெகுவாகப் போற்றிப் புகழ்ந் திருக்கின்றனர். இவ்விதம், இவர் உயர்பதவி, தகுதி களில் இருந்தபோதுகூட, சாதாரண மக்களுடனும், கிராம விவசாயிக ளுடனும் அதிகமாகப் பழகிவந்தார். அவர் களுக்கு நன்கு புரியும்படியான முறையில் நல்லுபதேசங் கள் செய்து வந்தார். அக்காலத்தில் ஆச்சாரியார் நடத்தி வந்த ஆடம்பர வாழ்க்கையை நேரில் பார்த்தவர்கள், இன்று அதாவது ஒத்துழையாப் போராட்ட காலத்தி லிருந்து அவர் இருந்துவரும் எளிய நிலையைக் கண்டால் பேராச்சரிய முறுவார்க ளென்பது திண்ணம்.

---

## ஆருவது இயல்.

### அரசியல் பிரவேசம்.

ஆச்சாரியார் வாழ்க்கையிலேயே பெருமாறுதலையுண்டு பண்ணிய குறிப்பிடத்தக்க சம்பவம் இவ்விடத்தில் தான் ஆரம்பமாகிறது. ஆச்சாரியார் வக்கிலா யிருந்தபோதே மகாத்மா காந்தியைப்பற்றிக் கேள்விப்பட்டிருந்தார். காந்தி யடிகள் தென்னாப்பிரிக்காவில் இந்தியர் உரிமைக்காக நடத்தி வந்த சத்தியாக்கிரகப் போராட்டம் இவரது மனதைப்பெரி தும் கவர்ந்தது. 1910 - வது வருடத்திலிருந்து அடிகளது சத்தியாக்கிரகப் போராட்டத்தை உன்னிப்பாகக்கவனித்து வந்தார். அஹிம்சா தர்மத்தை அடிப்படையாகக்கொண்டே தம் சத்தியாக்கிரகப் போராட்டங்களை அடிகள் செய்து

வருவது இவருக்குப் பொருத்தமாகக் காணப்பட்டது. ஆகவே காந்தியடிகளது சத்தியாக்கிரகப் போராட்டத்துக்குப் பேராதரவு காட்டிய தமிழ்ப்பெரியார்களோடு ஆச்சாரியாருங் கலந்து கொண்டார். ஆகவே, மகாத்மாவைப்பற்றி அதிகமாக அறிய ஆச்சாரியார் ஆவல் கொண்டார். மகாத்மாவைப் பற்றி வரும் விஷயங்களை யெல்லாம் ஆர்வமாக வாசிக்கலானார். மகாத்மாவால் எழுதப்பட்ட நூல்களையும், அவர் நடத்திவந்த பத்திரிகைகளையும் வரவழைத்துப் படித்து வந்தார். மகாத்மா காந்தி "இந்து சுயராஜ்யம்" என்று ஒரு புத்தகம் எழுதியிருந்தார். அப்புத்தகம் ஆச்சாரியாரது அறிவை அப்படியேகொள்ளைகொண்டுவிட்டது. அவ்வரிய நூல் வாயிலாகத் தாம் அறிந்துணர்ந்த உண்மைகளைப்பிறரும் அறிந்து உய்யவேண்டுமென்ற நன்னோக்கோடு, தமது நண்பர்களுக்கும், மற்றவர்களுக்கும் அப்புத்தகத்தை வாங்கிக் கொடுத்துப் படிக்கச்செய்தார். தென்னாப்பிரிக்காவில் இந்தியர் உரிமைக்காக மகாத்மா காந்தி ஐரோப்பியரை எதிர்த்துப் போராடினார் என்றால், நம் ஆச்சாரியாரும் இந்தியாவில் - சிறப்பாகத் தமிழ் நாட்டில் தாழ்த்தப்பட்ட வகுப்பார் உரிமைக்காக, வைதீக மனப்பான்மைகொண்ட ஜாதி இந்துக்களோடு போராடினாரல்லவா! அதுவன்றி, மகாத்மா தென்னாப்பிரிக்காவிலிருந்து இந்தியாவுக்கு வந்த பின்னர் தீண்டாமை யொழிப்பைத் தமது நிர்மாண வேலைத்திட்டங்களில் முக்கியமான தொன்றாகக் கொண்டு வேலை செய்வதற்கு முன்பே, ஆச்சாரியார் நம் தமிழ் நாட்டில் தீண்டாமையை வேரோடு கெல்லி யெறியும் வேலையைத் தீவிரமாகச்செய்து வந்தாரென்பதைக் கவனிக்கும்போது, இவ்விரு பெரியார்களது கொள்கைகளும் செயல்களும்

எவ்வளவு தூரம் ஒத்துக்காணப்படுகிறதென நாம் அறிந்து கொள்ளலாம்.

" புணர்ச்சி பழகுதல் வேண்டா உணர்ச்சிதான்
நட்பாங் கிழமை தரும்"

என்பது தமிழ் மறை மொழியன்றோ! இவ்வொற்றுமை யுணர்ச்சியே பிற்காலத்தில் நம் ஆச்சாரியாரை மகாத்மா காந்திக்கு மற்றெல்லாரைக் காட்டிலும் சிறந்த தோழராக் கியது.

ஆச்சாரியார் வக்கீல் தொழில் செய்கையிலேயே அரசியலிலும் அவகாசமேற்பட்ட போதெல்லாம் கவனஞ் செலுத்தி வந்தார். லோகமான்ய பாலகங்காதர திலகர் தோற்றுவித்த 'ஹோம்ரூல்' இயக்கம் அவர் உள்ளத்தை முதன் முதலாகக் கவர்ந்தது. எனவே அவர் திலகரை அரசியல் குருவாகக்கொண்டு அதற்குத் தம்மாலான ஆதரவு அளித்து வந்தார். மேற்படி இயக்க வளர்ச்சிக்கு அரும்பாடு பட்டுவந்த திரு வ. ஓ. சிதம்பரம் பிள்ளை, தேசியகவி சுப்பிரமணிய பாரதி முதலியவர்களுக்குப் பேருதவி செய்து வந்தார். மிதவாத மனப்பான்மை கொண்ட கோகலே போன்றவர்கள் காங்கிரஸை விட்டு வெளியேறுவதற்குக் காரணமாயிருந்த சூரத் காங்கிரஸுக்கு சென்னை மாகாணத்திலிருந்து சென்ற தீவிர வாதிகளில் நமது ஆச்சாரியாரும் ஒருவராயிருந்தார். சூரத் காங்கிரஸுக்குப் பின்னர், கோபால கிருஷ்ண கோகலே முதலிய தலைவர்கள் மிதவாதக்கட்சியொன்றை ஸ்தாபிக்கலானார்கள். தமிழ் நாட்டில் ஸ்ரீமான்கள் ஸ்ரீநிவாச சாஸ்திரி, சிவஸ்வாமி ஐயர் முதலியோர் மிதவாதக் கட்சிக்கு ஆதரவு தேட முயன்றனர். மிதவாதக் காங்கிரஸ் கமிட்டியொன்றை ஏற்படுத்த ஸ்ரீமான் சாஸ்திரி

யார் சேலத்துக்குச்சென்ருர். அவரது தலைமையிலேயே ஒரு பொதுக்கூட்டமும் நடந்தது. ஆச்சாரியாரும் இக்கூட்டத்தில் பிரசன்னமாயிருந்தார். ஆயினும், அவர் ஸ்ரீ சாஸ்திரி போன்றவர்களது மிதவாதப்போக்கைக் கண்டித்துப்பேசி ஒரு தீர்மானத்தை நிறைவேற்றினர். ஆச்சாரியார் சாஸ்திரியாருக்கு நெருங்கிய நண்பராதலால், அவரது பேருதவியையே பெரிதும் நம்பி வந்த சாஸ்திரியார் இதைக் கண்டு திகைப்புற்ருர். கடைசியில் தமது முயற்சி இங்கு பலிதமாகாது என்று அறிந்து சாஸ்திரியார் சேலத்தினின்றும் திரும்பினர்.

நம் நாட்டவரது அரசியல் விழிப்புக்கே பெருங்காரணமாக இருந்தது ரௌலட் சட்டமன்ருே! கடுமையும், அநீதியும் பொருந்திய அச்சட்டம் இந்தியா சட்டசபையில் மசோதாவாக வந்து நிறைவேறிய காலத்தில் தேசமே கொதித்து வெகுண்டு எழுந்தது. மகாத்மா காந்தி முதலிய தேசியத்தலைவர்கள் அக்கொடிய சட்டத்தை அமுலுக்குவரவொட்டாது தடுக்க சத்தியாக்கிரகஞ் செய்ய முயன்றனர். அச்சமயத்தில்தான் ஆச்சாரியார் அரசியலில் அடியெடுத்து வைத்தார். இதுவரை மறைமுகமாக வேலைசெய்து ஆதரவு தந்து வந்த ஆச்சாரியார் இப்போது தேசியப்போரில் நேர்முகமாக ஈடுபடலானர். ஆகவே, அவர் நகரசபைத்தலைவர் பதவியை ராஜிநாமா செய்துவிட்டார். ஸ்ரீ கஸ்தூரி ரங்க ஐயங்கார் முதலிய நண்பர்களது தூண்டுதலினல் அரசியலில் அதிகமாக ஈடுபடும் நோக்கோடு தமது சொந்த ஜில்லாவாகிய சேலத்தை விட்டு, சென்னைமா நகருக்கு வந்தார். மயிலாப்பூர் லஸ் சர்ச் ரோட்டிலுள்ள ஒரு பங்களாவில் குடியேறினர். சென்னை ஹைகோர்ட்டில் தம் வக்கீல் தொழிலைத் தொடங்கி நடத்தி வரலானர்.

ரௌலட் சட்டத்தை உடைத்தெறிய மகாத்மா காந்தி சத்தியாக்கிரக இயக்கத்தைத் தொடங்க 1919-வது ஆண்டு துவக்கத்தில் தீர்மானித்தார். தமது இயக்கத்துக்கு ஆதரவு பெற மகாத்மா இந்தியாவில் சுற்றுப்பிரயாணஞ் செய்தார். நம் ஆச்சாரியார் மகாத்மாகாந்தியைச் சென்னைக்கும் விஜயஞ் செய்யும்படி அழைத்தார். அவ்வழைப்பை ஏற்றுக்கொண்டு காந்தி அடிகள் சென்னைக்கு விஜயஞ்செய்தார். அப்போது மகாத்மா ஆச்சாரியார் விருந்தினராக அவரது மாளிகை யில் தங்கினர். மகாத்மாவுக்கு அனுப்பப்பட்ட அழைப்பில் ஸ்ரீ கஸ்தூரிரங்க ஐயங்காரது கையெழுத்திடப்பட் டிருந்த தால், அவரது விருந்தாளியாகவே தாம் இருப்பதாகவும், தம்மைப்போலவே ஆச்சாரியாரும் ஒரு விருந்தாளியே என் றும் மகாத்மா எண்ணியிருந்தார். ஆச்சாரியாரது தன்னடக் கம் அடிகளை அவ்வாறு கருதச்செய்தது. மகாதேவ தேசாய் உண்மையைக் கண்டு பிடித்துக் கூறிய பிறகே, மகாத்மா ஆச்சாரியாரது அரிய குணத்தை அறிந்து வியந்தார். இதுவரை கேள்வி மாத்திரத்தால் ஒருவரை யொருவர் அறிந்து வைத்திருந்த இருபெரும் தேசத்தலைவர்களும் இச்சமயம் அளவளாவி மனங் கலந்து பேசினர். அவ ரவரது மன நிலைகளையும், கொள்கைகளையும் இருவரும் நன்கு தெரிந்து கொண்டனர். இப்பெரியார்களது இணை பிரியா சிறந்த நட்புரிமைக்கு விதைவிதைத்தாய் விட்டது. மகாத்மா காந்தியின் சத்தியாக்கிரக இயக்கத்தின் மேன்மை யையும், தன்மையையுந் தெரிந்துகொள்ள ஸ்ரீ கஸ்தூரிரங்க ஐயங்கார் உள்ளூர் தலைவர்களும், வெளியூர்த்தலைவர்களும் அடங்கிய ஒரு சிறு மகாநாட்டை ஆச்சாரியார் மாளிகையில் கூட்டினர். மகாத்மா எல்லார்க்கும் தமது சத்தியாக் கிரக இயக்கத்தின் தத்துவங்களை விரிவாக எடுத்துக் கூறி

ளுர். அடிகளின் சத்தியாக்கிரக இயக்கம் நாட்டுக்கே நவீன மான தொன்ருதலால், பெரும்பாலார்க்கு இவர் கூறும் தத்துவ நுட்பம் அவ்வளவாக விளங்கவில்லை. ஆனல் நம் ஆச்சாரியாரோ அவற்றை வெகு விரைவில் கிரகித்துக் கொண்டதோடு, மயங்கி நிற்கும் மற்றவர்களுக்கும் மகாத்மா வோடு சேர்ந்து எடுத்து விளக்கலானுர். இது மகாத்மா உட் பட அனைவருக்கும் ஆச்சரியத்தை விளைத்தது. "பாபுஜி, நீங்கள் சத்தியாக்கிரக தத்துவங்களை விளக்கி நூல் எழுதி யிருக்கிறீர்களா? ஆச்சாரியார் அதைப் படித்திருக்கவேண் டும்; இல்லையேல், அவருக்கு இவ்வளவு நன்ருக எப்படி தெரிந்திருக்க முடியும்?" என்று ஸ்ரீஜத் வி. விஜயராக வாச்சாரியார் கேட்டார். காந்தியடிகள் புன்னகை புரிந்து, "நான் சத்தியாக்கிரக சம்பந்தமாக நூல் எதுவும் எழுதி வெளியிடவில்லை. ஆச்சாரியார் எனது சத்தியாக்கிரக தத்து வங்களை எவ்விதமோ நன்கு அறிந்து கொண்டிருக்கிருர்" என்று பதிலளித்தார்.

இச்சம்பவத்துக்குப்பிறகு தான் சென்னைமாநகரிலும் சத்தியாக்கிரக சபை யொன்று நிறுவப்பட்டது. பிரபல ஸ்தர்கள், அரசியல் அனுபவமுடையவர்கள் பலரிருந்தும், அச்சபைக்கு நமது ஆச்சாரியாரே காரியதரிசியாக ஏகமன தாகத் தேர்ந்தெடுக்கப் பட்டாரென்ருல் வாசகர்கள் ஆச் சரியப்பட மாட்டார்கள். விளம்பரமோ ஆர்ப்பாட்டமோ இன்றிச் சேவை செய்யும் இயல்புடைய ஆச்சாரியார் இப் பொறுப்பு வாய்ந்த பதவியை ஏற்றுக்கொள்ள முதலில் மறுத்தார். ஏனென்ருல், சென்னை நகரமக்கள் நன் கறிந்த எத்தலைவர்களேனும் இப்பதவியை ஏற்றுக்கொண்டால், தாம் மறைமுகமாக அவருக்கு உதவிசெய்து வரலாமென் பது இவருடைய எண்ணம்.

" இதனை இதனால் இவன்முடிக்கும் என்றுஆய்ந்து
அதனை அவன்கண் விடல்"

என்ற திருக்குறளின் உண்மைப்பொருளை உணர்ந்த காந்தியடிகள், தமது சத்தியாக்கிரக இயக்க தத்துவத்தை மற்றெல்லாரைக் காட்டிலும் நன்குணர்ந்த ஆச்சாரியாரே இச் சென்னை கிளை சபைக்குக் காரியதரிசியாக இருக்கவேண்டுமென்று மற்றவர்களோடு சேர்ந்து வற்புறுத்தினர். 'காங்கிரஸ் பீஷ்மர்' ஸ்ரீஜத் ஸி. விஜயராகவாச்சாரியார், 'இந்து' ஆசிரியர் ஸ்ரீஜத் கஸ்தூரிரங்க ஐயங்கார் உள்ளிட்ட பல அரசியல் அறிஞர்களெல்லாம் இச்சபையில் அங்கம் வகித்தனர். எனவே, இச்சபை சென்னையில் சத்தியாக்கிரக இயக்க வளர்ச்சிக்குத் தீவிரமாக வேலை செய்திருக்குமென்பதைக் கூறவும் வேண்டுமோ !

பிரம்ம ஞான சங்க ஸ்தாபகர்களிலொருவரும் தலைவருமாயிருந்த அன்னிபெஸண்டு அம்மையார் அயல் நாட்டைச் சேர்ந்தவராயிருந்தும், இந்திய விடுதலைப்போராட்டத்தில் ஈடுபட்டிருந்தார் என்பதும், காங்கிரஸ் மகாசபையில் முக்கிய அங்கத்தினராயிருந்தாரென்பதும் பெரும்பாலார் அறிந்த விஷயம். தமிழ் நாட்டுப் பொதுவாழ்விலும் அரசியலிலும் சிலகாலம் அவ்வம்மையார் மிகவும் பிரசித்தி பெற்றிருந்தார்கள். குறிப்பாக 1917 - வது வருடத்தில் பெஸண்டு அம்மையாரும் அவரைச் சேர்ந்தவர்களும் அரசியல் வாழ்வில் ஆதிக்கம் பெற்றிருந்தார்கள். அதுவரை, பெஸண்டு அம்மையார் திலகரைப் பின்பற்றி வந்தமையால் ஆச்சாரியாரும் அவரை ஆதரித்து வந்தார். ஹோம்ரூல் இயக்க கிளர்ச்சி காரணமாக 1918-ல் பெஸண்டு அம்மையார் சிறை சென்றபோது நமது ஆச்சாரியார் டாக்டர் நாயுடு முதலிய தோழர்களோடு தீவிரமாக வேலை செய்தார்.

இச்சமயத்தில் ஐரோப்பா மஹாயுத்தம் மும்மரமாக நடந்து கொண் டிருந்த தென்பதை வாசகர்கள் ஞாபகப்படுத்திக் கொள்ளவேண்டும். 'இந்தியா வுக்குச் சுயராஜ்யங் கொடுத்தா லொழிய, பிரிட்டிஷ் சர்க்காருக்கு இம்மஹாயுத்தத்தில் நாம் ஒரு உதவியுஞ் செய்யக்கூடாது' என்று திலகர் பெருமான் தீவிரமாகக் கிளர்ச்சிசெய்து வந்தார். 1918-வது ஆண்டில் காஞ்சி புரத்தில் தமிழ் மாகாண மகாநாடு நடைபெற்றது. கவியரசி ஸ்ரீமதி சரோஜனி தேவியார் தலைமை வகித்தார். பெஸண்டு அம்மையார் அம்மகா நாட்டில் 'இம்மஹாயுத் தத்தில் கலந்திருக்கும் பிரிட்டிஷ் சர்க்காருக்கு இந்தியர் நிபந்தனை யொன்றுங் கேளாமலே உதவி புரியவேண்டு' மென்று ஒரு தீர்மானங் கொண்டுவந்தார். நமது ஆச்சாரி யாருக்கும் அவரைச் சேர்ந்தவர்களுக்கும் திலகர் கொள் கைக்கு மாறாகத் தீர்மானம் கொண்டு வருவது சிறிதும் பிடிக்கவில்லை. எனவே, ஆச்சாரியாரின் வலது கைபோன்ற ஸ்ரீமான் சத்திய மூர்த்தி 'பிரிட்டிஷ் சர்க்கார் இந்தியா வுக் குச் சுயராஜ்யங் கொடுத்தாலொழிய, நாம் அவர்களுக்கு உதவி செய்யக்கூடாது' என்று ஒரு திருத்தப் பிரேரணை கொண்டு வந்தார். அசல் தீர்மானத்தை ஸர். ஸி. பி. இராம ஸாமி ஐயர் போன்ற மிதவாதத் தோழர்கள் ஆதரித்தனர். தம்மைப்போன்ற ஒரு பெண்மணி இத்தீர்மானத்தைக் கொண்டு வந்திருக்கிறார் என்ற அபிமானத்தாலோ என்னவோ, ஸ்ரீமதி சரோஜனி அம்மையார் கூட இதற்குப் போதரவு தந்தார். முதலில் பெஸண்டு அம்மையாரின் பேச்சுவன்மையில் மகாநாட்டுப் பிரதிநிதிகள் பெரும் பாலார் மயங்கிப்போயிருந்தனர். ஆனால், ஸ்ரீமான் சத்திய மூர்த்தி அசல் தீர்மானத்தைக் கண்டித்துத் திருத்தப் பிரேரணைகொண்டுவந்து சாதுரியமாகப் பேசியதும் பிரதி

நிதிகள் விழிப்படைந்தனர். எனவே, அசல் தீர்மானம் ஓட்டுக்கு விடப்பட்டபோது பெரும்பான்மையான ஓட்டுக்களால் தோல்வி யடைந்தது. ஆனால், ஸ்ரீமான் சத்தியமூர்த்தியின் திருத்தப் பிரேரணையும் ஸ்ரீமதி சரோஜனி தேவியின் ஒரு ஓட்டால் தோற்றது. எப்படியோ, இதற்கு முன் அரசியலில் பெஸண்டு அம்மையாருக்கு இருந்த செல்வாக்கு இச்சம்பவத்துக்குப் பிறகு அழிந்தொழிந்தது.

இவ்வாண்டில் தான் டாக்டர் வரதராஜலு நாயுடுமீது சர்க்கார் இராஜத் துவேஜ வழக்கு தொடர்ந்திருந்தனர். இவ்வழக்கு மதுரையில் நடைபெற்றது. இது தமிழ் நாட்டு மக்களிடையே ஒருவித பரபரப்பையுண்டு பண்ணியிருந்தது. பொது மக்கள் இவ்வழக்கை நடத்துவதற்கு நிதி திரட்டியுதவினர். நமது ஆச்சாரியார் வலிய வந்து ஸ்ரீ நாயுடு சார்பாகத் தோன்றி வாதித்தார். இவரது தீவிர முயற்சியாலும் வாதத் திறமையாலுமே இவ்வழக்கில் டாக்டர் நாயுடு விடுதலை யடைந்தார்.

---

## ஏழாவது இயல்.

### ஒத்துழையாமையும் சிறைவாசமும்.

மகாத்மா காந்தி சர்க்காரோடு ஒத்துழையாமைப் போராட்டத்தைத் துவக்கிய காலம். சட்டமறுப்பு இயக்கத்துக்கு முன்வரை தமிழ்நாட்டு அரசியலில் பிரதான புருஷராய் விளங்கிய ஸ்ரீமான் எஸ். ஸ்ரீநிவாச ஐயங்கார் 1920 - வது வருஷத் தொடக்கத்தில் தமது அட்வொகேட் ஜெனரல் பதவியைத் துறந்துவிட்டு காங்கிரஸில் சேர்ந்தார். அதே சமயத்தில் திருநெல்வேலியில் நடைபெற்ற தமிழ் மாகாண மகாநாட்டின் தலைமைப்பதவியை அவருக்கு

அளித்தார்கள். ஸ்ரீமான் ஸ்ரீநிவாஸ சாஸ்திரியார் தலைமையில் மிதவாதிகளும், சென்னைக் காங்கிரஸ் தலைவர்களும், நமது ஆச்சாரியாரைத் தலைவராகக் கொண்ட வெளியூர்க் காங்கிரஸ் காரர்களும் இம்மகாநாட்டில் கலந்து கொண்டனர். இதுவரை சென்னைக் காங்கிரஸ் தலைவர்களும், வெளியூர்க் காங்கிரஸ்காரர்களும் சர்க்காரையும், சர்க்காருக்கு ஆதரவளித்துவரும் மிதவாதக்கட்சி, ஜஸ்டிஸ்கட்சி ஆகியவைகளையும் எதிர்த்துப் போராடுவதிலேயே கவனஞ்செலுத்தி ஒற்றுமையாக வேலை செய்து வந்தார்கள். ஆயினும் அரசியலிலும், பொது வாழ்விலும் சென்னைக் காங்கிரஸ் தலைவர்களுக்கு இருந்துவரும் ஆதிக்கமும் செல்வாக்கும் வெளியூர்க் காங்கிரஸ்காரர்கள் மனதை உறுத்தி வந்தது.

இம் மகாநாட்டில் 'மகாத்மா காந்தியின் ஒத்துழையாமைத் திட்டத்தை ஏற்றுக்கொள்வதா ? வேண்டாமா ?' என்ற பிரச்சினை ஏற்பட்டது. சென்னைக் காங்கிரஸ் தலைவர்கள்கூட மகாத்மாவின் ஒத்துழையாத் திட்டத்தை ஏற்கத் தயங்கினரெனின், மிதவாதிகள் இதைக்கண்டுமருண்டதைச் சொல்லவேண்டுமோ ! ஆச்சாரியார் கோஷ்டியாரே ஒத்துழையாமைக்கு முழு ஆதரவளித்தனர். சென்னைக் காங்கிரஸ் தலைவர்களும், மிதவாதிகளும் தீவிரமாக எதிர்த்தும், ஒத்துழையாத் திட்டத்தை ஏற்று நடத்தவேண்டுமென்ற ஆச்சாரியாரது கொள்கையே மகாநாட்டில் வெற்றியுடன் நிறைவேறியது. இதன் பயனாக, சென்னைக் காங்கிரஸ் தலைவர்களின் அரசியல் செல்வாக்கு ஒருபடி தாழ்ந்ததென்றே சொல்லவேண்டும்.

மாண்டேகு - செம்ஸ்போர்டு அரசியல் சீர்திருத்தம் சட்டமான சமயம். இச் சட்டத்தினிடம் தங்களுக்குள்ள அதிருப்தியைக் காண்பித்து சுயராஜ்யமே தங்கள் லட்சியம்

என்று சர்க்காருக்குத் தெரிவிக்கவும், பஞ்சாப் படுகொலைக் குப் பரிகாரந் தேடவும் மகாத்மா காந்தி ஒத்துழையா இயக் கத்தை ஆரம்பித்தாரல்லவா! 1920-வது ஆண்டில் இவ் வியக்கத்தைப் பற்றி ஆலோசித்து ஒருவித முடிவுக்குவர, கல்கத்தாவில் விசேஷக் காங்கிரஸ் கூடியது. அக்காங்கிர ஸுக்கு ஆச்சாரியாரும், அவரது தோழர்களும் விஜயஞ் செய்திருந்தனர். கூட்டத்தில் காந்தியடிகளின் ஒத்துழையா இயக்கத் திட்டத்தைப் பண்டித மதன மோகன மாளவியா, டாக்டர் அன்னி பெஸண்டு போன்ற தலைவர்கள் தீவிரமாக எதிர்த்தனர். ஆயினும், ஆச்சாரியார் கோஷ்டியாரது தீவிர முயற்சியால் ஒத்துழையாத்திட்டம் பெரும்பாலான ஓட்டுக் களால் நிறைவேறியது. இம்முடிவைக் கண்டதும், இதுவரை தமிழ் நாட்டுக் காங்கிரஸ் கமிட்டியில் ஸ்தானங்கள் வகித்து வந்த சென்னைத் தலைவர்கள், தங்கள் பதவிகளினின்றும் விலகிக்கொண்டனர். ஆகவே, ஆச்சாரியார் அக் கமிட்டியில் வேறு சிலரை நியமித்து வேலைசெய்துவந்தார். ஆனால், அவர் மட்டும் அக்கமிட்டியில் முக்கிய பதவியெதுவும் வகிக்காது சாதாரண அங்கத்தினராகவே இருந்து வந்தார். இது அவரது தன்னடக்கத்தையும் உயர் குணத்தையுங் காட்டு கிறதன்றோ!

ஒத்துழையா இயக்கக் கொள்கைகளைப் பரப்புவதற்கு மகாத்மா காந்தி ஷௌகத் அலியுடன் இந்தியா முழுதும் சுற்றுப் பிரயாணஞ் செய்தது போலவே, நமது ஆச்சாரி யாரும் தமது தோழர்களோடு தமிழ் நாடெங்கும் ஒத் துழையாப் பிரசாரஞ் செய்து வந்தார்.

எல்லா இடங்களிலும் பரவியதுபோல் ஒத்துழையா இயக்கக் கிளர்ச்சி கோளத்திலும் தலையெடுத்தது. அங்குள்ள மக்கள் அதை உற்சாகத்துடன் வரவேற்றனர். அச்சமயம்

மலபாரில் மாப்பிள்ளைக் கலகம் ஏற்பட்டு ஓரே குழப்பமா யிருந்ததால், அஹிம்சா தத்துவத்தைப் பிரசாரஞ்செய்ய 1921 - வது வருஷம் பிப்ரவரி மாதத்தில் நம் ஆச்சாரியார் ஜனுப் யாகூப் ஹாஸன் முதலியோருடன் அவ்விடத்துக் குச் சென்றார். சர்க்கார் இவர்கள்மீது தடையுத்தரவு பிறப் பித்தனர். இத்தடையுத்தரவை மீறிய குற்றத்துக்காக ஜனுப் யாகூப் ஹாஸன் முதலிய சிலர் தண்டிக்கப்பட்டனர்.

இதற்குள் அவ் வருஷக் கடைசியிலேயே நாகபுரியில் காங்கிரஸ் நடைபெற்றது. அதில் ஒத்துழையா இயக்கத்தின் திட்டங்கள் வகுக்கப்பட்டன. சட்டசபைகள், கலாசாலைகள், நீதிமன்றங்கள் ஆகியவைகளைப் பகிஷ்கரிக்க வேண்டுமென் றும்,கதர் அணிதல், மதுவிலக்கு, இந்து முஸ்லிம் ஒற்றுமை, தீண்டாமை யொழிப்பு ஆகிய நிர்மாண வேலைத்திட்டங் களை நிறைவேற்றி வைக்கவேண்டுமென்றும் அத் திட்டங் களில் விவரிக்கப்பட் டிருந்தன. அவையனைத்தும் காங்கிரஸ் மகாசபையால் அங்கீகரிக்கப்பட்டு நிறைவேறின. இங்கு தான் ஆச்சாரியார் காங்கிரஸ் மகாசபையின் பொதுக்காரிய தரிசிகளில் ஒருவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இவ்வொத் துழையா இயக்கத்தின்போது தான், இச்சமயம் விளம்பர இலாகா மந்திரியாயிருக்கும் ஸ்ரீ எஸ். இராமநாதன் எம்.ஏ., பி. எல்., ஸ்ரீ கே. சந்தானம், ஸ்ரீ என். எஸ். வரதாச்சாரி யார், ஸ்ரீ கே. எஸ். சுப்பிரமணியம் முதலிய வாலிபர்கள் கோர்ட்டைப் பகிஷ்கரித்துவிட்டு ஆச்சாரியாரோடு சேர்ந்து, அவருக்குப் பலவகையிலும் உதவியா யிருந்தனர்.

அக்காலத்தில் சென்னைத் தினசரி பத்திரிகைகள் ஒத் துழையா இயக்கத்துக்கு ஆதரவாக இல்லை. அரசியலில் முக் கியத்துவம் வகித்து வந்த தலைவர்கள், பிரபல பத்திரிகைகள்

இவர்களின் எதிர்ப்புகளைச் சமாளித்துக்கொண்டு ஆச்சாரி யார் ஒத்துழையாமை இயக்கத்தை வெற்றிகரமாக நடத்தி, மற்ற மாகாணங்களைப்போல் நம் சென்னை மாகாணத்துக் கும் நற்பெயர் வாங்கித் தந்தாரென்றால் அவரது விடா முயற்சியையும், மனத்திண்மையையும், பெருமையையும் என்னென்று கூறுவது !

ஆச்சாரியாரது ஒத்துழையா இயக்கப் பிரசாரத்தைக் கேட்டு, தமிழ் நாட்டில் கலாசாலைகளைப் பகிஷ்கரித்து விட்டு வந்த மாணவர்களும், கோர்ட்டுகளைப் பகிஷ்கரித்து வக்கீல் களும், சட்டசபைகளை விட்டு வெளியேறிய கனவான்களும் கணக்கற்றவர்களாவர்! 'மாணவர்களே ! சர்க்கார் கலாசாலை களைப் பகிஷ்கரியுங்கள்; தேச சேவையில் ஈடுபடுங்கள்' என்று ஒத்துழையா வாதிகள் ஒருபக்கமும், 'மாணவர்களே ! அர சியலில் ஈடுபடாதீர்கள்' என்று ஒரு சிலர் மற்றொரு பக்க மும் எழுப்பிய முழக்கங்களைக் கேட்டு, இன்னது செய்வ தென அறியாது மயங்கிய மாணவர்கள் பலருக்கு ஆச்சாரி யார் நல்வழி காட்டினார். அவர்களில் சாந்தி நிகேதனத்தில் தமிழாசிரியராயிருந்த ஸ்ரீ வி. தேவாச்சாரியன் என்பார் ஒருவர். இவர் சர்க்கார் ஆதரவில் நடைபெறும் மயிலாப்பூர் பி. எஸ். ஹைஸ்கூலில் படித்துக்கொண் டிருந்தார். இவர் அதைப் பகிஷ்கரித்து வரவேண்டுமென்று எண்ணமிருந்த தாயினும், தந்தையார் இதற்கு நேர்மாறாயிருந்தார். ஆகவே, இவர் தமது தர்ம சங்கடமான நிலைமையை விளக்கி நம் ஆச்சாரியாருக்குக் கடிதமெழுதி யிருந்தார். ஆச்சாரியார் உடனே அவரை நேரில் வரவழைத்துப் பேசி அவர் நோக் கத்தை யறிந்தார். பிறகு, ஆச்சாரியார் தக்ஷண பாரத ஹிந்தி பிரசார சபையின் காரியதரிசியாயிருந்த ஸ்ரீ ஹரிஹர சர்மாவுக்கு ஒரு கடிதமெழுதி இவரிடம் கொடுத்தனுப்

பினூர். அதன்படி, ஸ்ரீ தேவாச்சாரியனுக்கு ஹிந்தி கற்பிக்கப்பட்டு, பிரயாகை என்னுமிடத்திலுள்ள ஹிந்தி போதனு முறைப் பாடசாலைக்கு அனுப்ப ஏற்பாடாயிற்று. ஆனுல், ஸ்ரீ தேவாச்சாரியன் தந்தையார் தன் மகனைப் பிரயாகைக்கு அனுப்ப மறுத்து விட்டார். இது எவ்வாருயினும், நம் ஆச்சாரியார் தம் உதவியை நாடி வந்த மாணவருக்கு எவ்வளவு தூரம் உதவி செய்யவேண்டுமோ அவ்வளவுஞ் செய்தார் என்பது இங்கு கவனிக்கத்தக்கது.

ஆச்சாரியார் ஒத்துழையா இயக்க சம்பந்தமாகப் பிரசாரஞ் செய்யத்தொடங்கும்போதே தம்புதல்வர்களைக் கலாசாலையைவிட்டு விடும்படி கட்டளையிட்டிருந்தார். அச்சமயம் ஸ்ரீ கிருஷ்ணசாமி பி. ஏ., ஜூனியர் வகுப்பிலும், ஸ்ரீ இராமசாமி இண்டர்மீடியட் வகுப்பிலும் வாசித்துக்கொண்டிருந்தனர். ஆனுல், எக்காரணத்தாலோ அவர்கள் கலாசாலையை விட்டு நிற்கவில்லை. இயக்க பிரசார சம்பந்தமாக அடிக்கடி வெளியூர்போய்வந்து கொண்டிருந்த ஆச்சாரியார் தம் புதல்வர்கள் இன்னும் கலாசாலையைப் பகிஷ்கரிக்கா திருப்பதைக் கவனிக்கவில்லை. ஆனுல், ஒரு பொல்லாத மாணவன், ஆச்சாரியார் பிரசங்கஞ் செய்த ஒரு பொதுக்கூட்டத்தில் 'உமது புத்திரர்கள் கலாசாலையைப் பகிஷ்கரித்து விட்டார்களா?' என்று குறும்பாக ஒரு கேள்வி கேட்டு விட்டான். அப்போது தான் ஆச்சாரியார் உண்மை நிலையை யுணர்ந்து அடங்காக் கோபங்கொண்டார். வீடு திரும்பியதும், ஆச்சாரியார் தம்பிள்ளைகளை நோக்கி, 'நீங்கள் முதலில் கலாசாலைக்கு ராஜிநாமா எழுதிக் கொடுத்துவிட்டு வந்தாலாச்சு; இல்லாவிடில் வீட்டில் அடியெடுத்து வைக்கக்கூடாது' என்று கண்டிப்பாகக் கூறிவிட்டார். இரு குமாரர்களும் கலாசாலைக்கு ராஜிநாமா கொடுத்து விட்டு வந்த பிறகே, ஆச்சாரியார்

அவர்களை வீட்டில் அநுமதித்தார். இதிலிருந்து ஆச்சாரியார் வெறும் வாய்ப்பேச்சு வீரரல்லர் என்று தெரிகிறதன்றோ! சொல்வதொன்று; செய்வதொன்று என்ற வழவழாக் கொள்கை அவரிடங் கிடையாது. தம்மை முதலில் திருத்திக்கொண்டே, அதாவது தாம் எதைச் சொல்ல விரும்புகிறாரோ அதை முதலில் தாம் செய்து காட்டிய பிறகே, பிறருக்கு அதுபற்றி உபதேசஞ்செய்வார் என்பது இதுபோன்ற பல சம்பவங்களால் நாம் அறியலாம்.

ஒத்துழையா இயக்கத்தில் வெற்றி பெற்றதன் பயனாக, ஆச்சாரியாரது பெயர் வெகு பிரபலமடைந்தது. அவருக்கு என்றுமில்லா செல்வாக்கும் ஆதிக்கமும் ஏற்பட்டது. தமிழ் மக்கள் அவரைத் தெய்வமெனக் கொண்டாடினர். இந் நிலைமையைக்கண்ட பிறகுதான், சென்னைத்தலைவர்கள் தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டியை ஆச்சாரியாரது ஆதிக்கத்தில் விட்டுத் தாங்கள் விலகிக்கொண்டது தவறு என உணர்ந்தனர். ஆகவே, அவர்கள் பழையபடி அக் கமிட்டியைக் கைப்பற்ற பகிரதப் பிரயத்தனஞ் செய்தனர். ஆனால், இவர்களுக்குத் தமிழ் மக்களது ஆதரவு கிடைக்கவில்லை. ஆகவே, அவர்கள் தங்களது முயற்சியில் தோல்வியுற்றனர்.

ஆச்சாரியார் பல ஜில்லாக்களுக்குஞ் சென்று ஒத்துழையாப் பிரசாரஞ் செய்து கொண்டு வருகையில், வேலூரில் இ. பி. கோ. 144 - வது பிரிவின்படி அவருக்குத் தடையுத்தரவு பிறப்பிக்கப்பட்டது. ஆச்சாரியார் இதைக் கண்டு சிறிதும் அஞ்சாது, அத்தடையுத்தரவை மீறி அங்கு பிரசங்கஞ் செய்தார். அதன்பயனாக, அவர் போலீஸாரால் கைது செய்யப்பட்டார். சர்க்கார் தடையுத்தரவை மீறியதாகக் குற்றஞ்சாட்டி மாஜிஸ்டிரேட் கோர்ட்டில் இவர் மீது

வழக்கு தொடுத்தனர். விசாரணை நடைபெற்றது. ஆச்சாரியார் எதிர்வழக்காடவேயில்லை. மாஜிஸ்டிரேட் அவருக்கு மூன்றுமாதம் வெறுங்காவல் தண்டனை விதித்தார். 1921-வது வருடம் டிசம்பர்மாதம் 21-ந் தேதியன்று நமது ஆச்சாரியார் அச்சமயம் தமிழ் மாகாண காங்கிரஸ் கமிட்டியின் தலைவராயிருந்த ஆரணி ஸ்ரீ சுப்பிரமணிய சாஸ்திரியாருடன் வேலூர் சிறைச்சாலையை யடைந்தார். ஆச்சாரியாரைப் பின்பற்றித்தமிழ்நாட்டில் பலர்சட்டத்தை மீறிச்சிறைபுகுந்தனர். சிறைச்சாலையில் ஆச்சாரியார் இருக்கையில், அங்கு தமக்கு ஏற்பட்ட அநுபவங்களை யெல்லாம் நாடோறுங் குறித்து (Jail Diary) வைத்து வந்தார். இக்குறிப்புக்களே பின்னர், "சக்கரவர்த்தி ஸ்ரீஜத் இராஜகோபாலாச்சாரியாரின் சிறைவாசம்" என்ற பெயரோடு புத்தக ரூபமாக வெளியிடப்பட்டது. இதில் பல ரஸமான குறிப்புகள் காணப்படுகின்றன. இது பொதுவாக, அனைவரும் படித்தறியக்கூடிய அரிய நூலாகும். இது வன்றி, "ஸோக்ரதர்" என்ற பெயருடன் கிரேக்க தேச மகா ஞானியான 'சாக்ரடீஸ்' என்பாரைப் பற்றி அழகிய சிறு நூலொன்று எழுதியிருக்கிறார். இதுவே ஆச்சாரியார் முதன் முதலாக எழுதிய தமிழ் நூலாகும்.

ஆச்சாரியார் வேலூரில் சிறை புகுந்தபோது, காச (Asthma) நோயால் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தார். அத்துடன், காலில் கட்டியும், சிரங்கும் ஏற்பட்டு அவரைத் துன்புறுத்தி வந்தன. இவ்வளவு தேக அசௌக்கியமான நிலையிலும் அவர் தேசத்துக்காகச் சிறை புகுவதைத் தமது பாக்கியமாகக் கருதினர். இது, 'உலகில் நியாயமான ஒரு காரணத்திற்காக இப்படி சிறைபுக வெகு சிலருக்குத் தான் பாக்கியம் கிடைக்கிறது. அப்படி போன வெகு சிலரில் நம் நாட்டார் எவ்வளவு குறைவு? அச்சிலருள் தற்சமயம் நான்

ஒருவனன்றோ! இக்கௌரவத்தை யடைய நான் மிக அதிர்ஷ்ட சாலியாகவே இருக்கவேண்டும்' என்று அவர் தமது சிறைக்குறிப்பில் கூறுவதிலிருந்து தெரிகிறது. ஒத்துழையாப் போராட்ட காலத்தில் தமிழ் நாட்டார் போதிய பங்கு எடுத்துக்கொண்டு சேவைசெய்யவில்லையே யென்று அவர் கவலைகொண் டிருந்தா ரென்பதும் இதிலிருந்து விளங்குகிற தல்லவா!

ஆச்சாரியார் தமது தண்டனை காலம் முடிவடைந்த தால், 1922 - வது வருடம் மார்ச்சு மாதம் 20-ந் தேதி யன்று விடுதலை யடைந்தார். சிறைவாயிலில் ஸ்ரீ சிங்காரவேலு செட்டியாரும், ஸ்ரீ ஈ. வே. இராமசாமி நாயகரும் ஆச்சாரி யாரை எதிர்கொண்டு அழைத்துச் சென்றனர். தேசியப் போராட்டங் காரணமாக சிறைசென்றாலும், விடுதலை யடைய சில நாட்கள் இருக்கும்போதே தாங்கள் சிறையி லிருந்து வெளியேறுகையில் ஆடம்பரமாக வரவேற்பு அளிப்பதற்குத் தக்க ஏற்பாடு செய்யும்படி தங்கள் நண்பர் களுக்கு அறிவிக்கும் தேசபக்தர்களும் சிலர் உண்டல்லவா! பத்திரிகா நிருபர்களுக்குத் தங்கள் சிறையநுபவத்தைப் பற்றிப் பிரமாதமாகப் பேட்டியளிப்போரும், பொதுக் கூட் டங்களில் தாங்கள் சிறையில் அநுபவித்த கஷ்டங்களைப் பற்றி வர்ணித்துக் கூறுவோரும் எத்தனையோ பேர்! ஆனல், நம் ஆச்சாரியாரோ இவற்றிற் கெல்லாம் நேர்மாறானவர். இவரது விடுதலை நாளைக் குறித்து ஒருவருக்கும் அறிவிக்க வில்லை. நண்பர்களாகத் தெரிந்து அவரை வரவேற்கக் காத் திருந்தும், ஆடம்பரமான வரவேற்பினின்றுங் கூடுமான வரை தப்பித்துக்கொள்ளவே முயன்றார். ஆச்சாரியார் விடு தலை பெறுவதை எவ்வாறோ அறிந்து வேலூர், ஆரணி முதலிய இடங்களிலிருந்து வந்த தேச பக்த இளைஞர்

கள் பலர் இவருக்குத் தங்கள் அன்பைத் தெரிவிக்க வேண்டி, பூமாலை முதலியன போட முயன்றனர். ஆனால், ஆச்சாரியார் இதற்குச் சிறிதும் இணங்கவில்லை. கடைசியில், ஸ்ரீ ஈ. வே. இராமசாமி நாயகர் முதலிய நண்பர்கள் வற்புறுத்தியதன் பேரில் இதற்கு ஒருவாறு இணங்கினர். இவரைப் பேட்டி காண வந்த பத்திரிகா நிருபர்களுக்கு ஒன்றுங்கூற மறுத்துவிட்டார். அன்று மாலை நடந்த பொதுக் கூட்டத்திலும் அவர் எதுவும் பேசவில்லை.

ஆச்சாரியார் சிறையி லிருந்து வெளிவருவதற்குள், நாட்டில் பல பெரிய மாறுதல்கள் ஏற்பட்டிருந்தன. ஐக்கிய மாகாணத்திலுள்ள சௌரி சௌரா என்னுமிடத்திலும் சென்னை மாநகரிலும் நடந்த பலாத்காரச் செயல்களைக் கண்டு, மகாத்மா காந்தி சட்டமறுப்பை நிறுத்தலானர். பிப்ரவரிமாதம் 12-ந் தேதி பர்டோலியில் கூடிய காங்கிரஸ் காரியக் கமிட்டி இதை அங்கிகரித்தது. அடுத்து டில்லியில் கூடிய அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி இதை அங்கீகரித்துக்கொண்டு, தனிப்பட்டோர் சட்ட மறுப்பு செய்ய அதிகாரம் அளித்தது. யாரோ சிலர் தவறிழைத்து விட்டதற்காகத் தேசத்தையே தண்டிக்கு முறையில் சட்ட மறுப்பை நிறுத்தியது சரியல்ல எனக்கூறி பண்டித மோதிலால் நேரு, லாலாலஜபதிராய் போன்றவர்கள் மகாத்மாவை எதிர்த்தார்கள். மற்றும் பலரும் காந்தியடிகள் செய்கையைப் பலமாகக் கண்டித்தனர். இந் நிலைமையைக் கண்டு மகாத்மாவின் செல்வாக்கு ஒடுங்கி விட்டதென்று சர்க்கார் மனப்பால் குடித்து, அவரை மார்ச்சு மாதம் 13-ந் தேதி ராஜத்துவேஷக் குற்றஞ் சாட்டி கைது செய்து ஆறுவருஷத் தண்டனை யளித்தனர். சட்ட மறுப்புத் தலைவரைச் சிறைக்குள் புகுத்திய பிறகு, சர்க்கார் அடக்குமுறை பாணத்தை மிகக் கடுமை

யாகப் பிரயோகித்து அவரது சைன்னியத்தைச் சிதறடித்து அழிக்க முயன்றனர். காந்தியடிகள் சிறைவாசமும், சர்க்கார் அடக்குமுறைக் கடுமையுஞ் சேர்ந்து தேசமக்களைச் சோர்வுறச் செய்தது.

---

## எட்டாவது இயல்.

### சுயராஜ்யக் கட்சிக்குத் தீவிர ஏதிர்ப்பு.

ஜூன்மாதம் லக்ஷ்மணபுரியில் கூடிய அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி, சட்டமறுப்பு இயக்கத்தின் பலாபலன் என்னவென்று கவனிக்கத் தொடங்கியது. இச்சமயத்தில் சித்தரஞ்சன தாஸர், வித்தல்பாய் படேல் போன்றவர்கள் தற்போதைய காங்கிரஸ் கொள்கையை மாற்றி, அதிகார வர்க்கத்தினருடைய கோட்டைகளான சட்ட சபைகளில் பிரவேசித்து அங்கு ஒத்துழையாமையை அநுஷ்டிக்க வேண்டுமென்று வற்புறுத்தினர். முடிவில், நாட்டின் நிலைமையைக் கண்டறிய ஒரு சிலரைச் சுற்றுப் பிரயாணஞ் செய்ய நியமிக்கும்படி அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியார் காங்கிரஸ் தலைவரை வேண்டிக்கொண்டனர். அதன்படி ஏற்பட்ட சுற்றுப்பிரயாணக் கமிட்டியில், பண்டித மோதிலால் நேரு, டாக்டர் அன்சாரி, வித்தல்பாய் படேல், ஸ்ரீஜத் எஸ். கஸ்தூரிரங்க ஐயங்கார் முதலியவர்களோடு நமது ஆச்சாரியாரும் ஒருவராக நியமிக்கப்பட்டார். சிலமாதங்களில் சட்டமறுப்பு விசாரணைக் கமிட்டி இந்தியா முழுதும் சுற்றுப்பிரயாணஞ் செய்து முடித்தது. கடைசியாக, இக் கமிட்டி ஒரு அறிக்கை வெளியிட்டது. அதில், சட்ட மறுப்பைக் கைவிட்டுவிட கமிட்டியார் சிபார்சு செய்திருந்தனர். ஆனால், சட்ட சபைப் பிரவேசஞ் செய்வதைப்பற்றி இவர்க

ளிடையே அபிப்பிராய பேதமேற்பட்டது. பண்டிதமோதி லால்நேரு, வித்தல்பாய் படேல், ஹகீம் அஜ்மல்கான் ஆகிய மூவரும் சட்ட சபைப் பிரவேசத்தை ஆதரித்தனர். டாக்டர் அன்சாரி, ஸ்ரீஜத் இராஜகோபாலாச்சாரியார், ஸ்ரீஜத் கஸ்தூரிரங்க ஐயங்கார் ஆகிய மூவரும் சட்டசபைப் பிரவேசங் கூடாதென எதிர்த்தனர்.

இவ்விதம் ஒத்துழையா இயக்கத்தைச் சேர்ந்தவர்களுக்குள் இருவித அபிப்பிராயங்கள் ஏற்படவே, இவ்விரு உணர்ச்சிகளும் நாட்டில் சிறிது சிறிதாக பரவலாயின. மாறுதல் வேண்டாதாருக்கு நாட்டில் எவ்வளவு செல்வாக்கு இருந்ததோ அதுபோலவே, மாறுதல் விரும்புங் கோஷ்டியாருக்குஞ் செல்வாக்கு ஏற்படலாயிற்று.

1922 - வது வருடக்கடைசியில் கயா என்னும் நகரில் காங்கிரஸ் மகாசபை கூடியது. அதில் தேசபந்து சித்தரஞ்சன தாஸ் தலைமை வகித்தார். தேசியப் போராட்டத்தில் கலந்துகொண்ட எல்லா தலைவர்களும் இக் காங்கிரஸுக்கு விஜயஞ் செய்திருந்தனர். இவர்கள் மூன்று கட்சியாகப் பிரிந்து தத்தம் அபிப்பிராயங்களை நிறைவேற்ற முயன்றனர். சர்க்கார் ஏற்படுத்தும் சட்ட சபைத் தேர்தல்களில் நின்று வெற்றிபெற்றதும், சட்ட சபைகளுக்குப் போவதில்லை; போனாலும் இராஜ விஸ்வாசப் பிரமாணஞ் செய்வதில்லை என்று ஒரு சாரார் கூறினர். சட்டசபை வேலையில் தீவிர உணர்ச்சி காட்டிய மற்றொரு சாரார் சட்ட சபைகளைக் கைப்பற்றி மந்திரி சபைகளை ஏற்படுத்த முடியாமல் செய்து சர்க்கார் மந்திராலோசனை சபைகளை உடைத்து சர்க்காரோடு போராடி வெற்றி பெறுவதாக உறுதி கூறினர். காந்தியடிகளைப் பின்பற்றும் மாறுதல் வேண்டாதாரோ எக் காரணத்தை முன்னிட்டும் சட்ட சபைப் பிரவேசங் கூடா

தென்று வாதாடினர். சமீபத்திலேயே தம் பட்டம் பதவிகளை யெல்லாம் துறந்து காங்கிரஸில் சேர்ந்த சென்னைத் தலைவர் ஸ்ரீஜத் எஸ். ஸ்ரீநிவாஸ ஐயங்கார் தேசபந்து தாஸ் கட்சியை ஆதரித்தார். அவரும் பண்டிதமோதிலால் நேருவும் சட்ட சபைப் பிரவேசத் தீர்மானத்தை நிறைவேற்ற வெகுவாகப் பாடுபட்டனர். ஆனால், மகாராஷ்டிரத் தலைவர்கள் உட்பட, மாறுதல் வேண்டாத் தலைவர்கள் உதவியைக்கொண்டு, பண்டிதமோதிலால் நேரு, வித்தல்பாய் படேல், ஹகீம் அஜ் மல்கான் போன்ற தலைவர்களை எதிர்த்து காந்தியடிகளின் கொள்கைகளை நிலை நாட்டிய பெருமை நமது ஆச்சாரி யாருக்கே சிறப்பாக உரியதாகும். இக் காங்கிரஸில் நிறை வேற்றிய தீர்மானங்களில் சட்டசபை பகிஷ்காரத் தீர்மானமும், கடன் மறுப்புத் தீர்மானமும் முக்கிய மானவைகளாகும். அவ்விரு தீர்மானங்களையும் பலத்த எதிர்ப்புக்கிடையே நமது ஆச்சாரியாரே நிறைவேற்றி வைத் தார். பின்னர் 1929-வது வருடத்தில் பண்டித ஜவஹர்லால் நேரு தலைமையில் நடைபெற்ற லாகூர் காங்கிரஸில் இவ்விரு தீர்மானங்களும் அப்படியே ஒப்புக்கொள்ளப் பட்டதி லிருந்து அவைகளின் சிறப்பு நன்கு விளங்கும்.

கயா காங்கிரஸில் தமது கொள்கை வெற்றி பெறாது போகவே, காங்கிரஸ் முடிந்ததும், தேசபந்து தாஸ் தமது தலைவர் பதவியை ராஜிநாமா செய்துவிட்டு, மறுகணமே சுயராஜ்யக்கட்சியை ஏற்படுத்தினர். தமது கட்சிக்கு ஆதரவு தேட தேசபந்து தாஸ் இந்தியா முழுதும் சுற்றுப் பிர யாணஞ் செய்யலானர்.

அவ்விதம் சுற்றுப் பிரயாணஞ் செய்து வருகையில், தேசபந்து தாஸ் சேலத்துக்கு விஜயஞ்செய்திருந்தார். டாக்டர் வரதாராஜலு நாயுடு தலைமையில் சுயராஜ்யக்

கட்சியை ஆதரிப்பதற்காகப் பொதுக்கூட்டமொன்று நடை பெற்றது. ஏராளமான மக்கள் கூடியிருந்தனர். தேசபந்து தாஸ் சுயராஜ்யக் கட்சியின் கொள்கைகளை விரிவாக எடுத்து விளக்கிப் பேசினார். அவர் ஆங்கிலத்தில் பேசியதை ஸ்ரீமான் சத்திய மூர்த்தி தமிழில் மொழி பெயர்த்துக் கூறினார். இக் கூட்டத்தில் நமது ஆச்சாரியாரும் பிரசன்னமா யிருந்ததால், தேசபந்து தாஸ் பேசி முடிந்ததும், இவர் எழுந்து சுயராஜ்யக் கட்சியின் முக்கிய வேலையான சட்ட சபைப் பிரவேசத்தின் நியாயமான காரணங்களைக் காட்டிக் கண்டித்து இதனால் நாட்டிற்கு நலனென்றும் விளையா தென்று அழுத்தந் திருத்தமாகக் கூறிப் பிரசங்கித்தார். எனவே, தேசபந்து தாஸ் பிரசங்கத்தைவிட, ஆச்சாரி யாரின் ஆணித்தரமான பிரசங்கமே மக்கள் மனதைக் கவர்ந்ததால், எதிர்பார்த்த அளவு, சேலத்தில் சுயராஜ்யக் கட்சிக்கு ஆதரவு கிடைக்கவில்லை.

இவ்விதமே ஆச்சாரியார் நாடெங்கும் சட்ட சபைப் பிரவேசத் திட்டத்தை எதிர்த்து அல்லும் பகலும் பிர சாரஞ் செய்யலானார். சட்டசபைப் பிரவேசத்தினால் என் னென்ன தீமைகள் நேரும் என்பதை வெகு திறமையாக எடுத்துக்காட்டிப் பல இடங்களிலும் பிரசங்கஞ் செய்தார். மற்ற மாறுதல் வேண்டாதவர்களைக் காட்டிலும் ஆச்சாரி யாரது தீவிர எதிர்ப்பைச் சுயராஜ்யக் கட்சியாரால் சமா ளிக்க முடியவில்லை. ஆகவே, அலகாபாத்தில் நடைபெற்ற அகில இந்தியா காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில், மாறுதல் வேண்டாதாரும் சுயராஜ்யக் கட்சியினரும் ஒருவித சமரசத்துக்கு வரவேண்டியதாயிற்று. எப்ரல்மாதம் 30-ந் தேதி வரை இருதரப்பினரும் சட்ட சபைப் பிரவேசத்தைப் பற்றிப் பிரசாரஞ்செய்வதில்லையென் றுஒப்புக்கொண்டு,அதற்

கிடையில் மற்ற வேலைகளைக் கவனிப்பதாகச் சம்மதித்தனர். அதற்குப் பிறகு தத்தம் கட்சிப்போக்குப்படி வேலை செய்து கொள்ள உரிமை யளிக்கப்பட்டது.

எனவே, நமது ஆச்சாரியார், பாபுராஜேந்திர பிரசாத், சேத் ஜம்னுலால் பஜாஜ், தேவதாஸ் காந்தி ஆகியோர் நிர்மாண வேலைத்திட்டப் பிரசாரத்தை வெகு மும்மரமாக நடத்தலாயினர். பம்பாயில் நடைபெற்ற அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் இவர்கள் தங்கள் வேலையைப் பற்றி ஓர் அறிக்கையைச் சமர்ப்பித்தனர். அதே சமயத்தில் கூடிய மற்றொரு கமிட்டிக் கூட்டத்தில் சட்டசபைப் பிரவேசத்தைக் கண்டித்து எதிர்ப்பிரசாரஞ் செய்யக்கூடாதென்று தீர்மானிக்கப்பட்டது. இது கயா காங்கிரஸ் தீர்மானத்துக்கு மாறுபட்டதென்று கருதி, நமது ஆச்சாரியார், இராஜேந்திர பிரஸாத், வல்லபாய் படேல், பிரிஜிக்ஷோர் பிரஸாத், கங்காதர ராவ் தேஷ்பாண்டே, ஜம்னுலால் பஜாஜ் ஆகியோர் காரியக் கமிட்டியிலிருந்து ராஜிநாமா செய்தனர். மாறுதல் வேண்டாத் தலைவர்களுடைய நிலைமையை விளக்கியும், கயா காங்கிரஸ் தீர்மானத்தோடு அகில இந்தியக் கமிட்டித் தீர்மானம் எவ்விதம் மாறுபடுகிறது என்பதை எடுத்துக் காட்டியும், சட்டசபைப் பகிஷ்காரத்தின் அவசியத்தை வற்புறுத்தியும் ஆச்சாரியார் தமிழில் ஒரு துண்டுப் பிரசுரம் வெளியிட்டுப் பரவச்செய்தார். ஆச்சாரியார் முதலியவர்களை ராஜிநாமா செய்யவேண்டாமென்று பண்டித ஜவஹர்லால் நேரு வெகு தூரங் கேட்டுக் கொண்டும் பயனில்லை.

மகாத்மா காந்தி சிறைசென்ற பிறகு, நமது ஆச்சாரியார் தான் "யுவ இந்தியா" (Young India) என்னும் ஆங்கிலப் பத்திரிகையை நடத்திவந்தா ரென்பதை நண்பர்கள்

அறியவேண்டும். நாகபுரியில் காங்கிரஸ் ஊர்வலமொன்றில் தேசியக்கொடியைக் கொண்டுபோகக் கூடாதென்று போலீஸார் தடையுத்தரவு பிறப்பித்ததன் பயனாக, 1923 - ஆது வருடம் மேமாதம் முதல் தேதி தேசியக்கொடி சத்தியாக்கிரகப் போர் ஆரம்பமாயிற்று. சாதாரணமாக ஆரம்பிக்கப்பட்ட இக்கொடிப்போர் அகில இந்திய இயக்கமாகப் பரவுவதற்கு ஆச்சாரியார், "யுவ இந்தியா"வில் எழுதிய உணர்ச்சிமிக்க கட்டுரைகளே முக்கிய காரணமென்று சொல்லலாம். எல்லா மாகாணங்களிலிருந்தும் தேச பக்தர்கள் பலர் திரள் திரளாக இப்போரில் கலந்து கொண்டனர். தமிழ் நாட்டாரும் இதில் பங்கெடுத்துக் கொண்டனர் என்று சொல்ல வேண்டியதில்லை. ஆச்சாரியாரை அரசியல் குருவாகக் கொண்ட ஸ்ரீவரதாச்சாரியார், ஸ்ரீ கே. எஸ். சுப்பிரமணியம் முதலியோர் இப்போரின் துவக்கத்திலேயே போய்ச் சேர்ந்தனர். சேத் ஜம்னுலால் பஜாஜ் போன்ற தலைவர்கள் சிறைப்பட்டதன் பயனாக, மூன்று மாதத்துக்குள் கொடிப் போரில் காங்கிரஸ்காரர்களுக்கே வெற்றி ஏற்பட்டது.

காலச் சக்கரத்தின் வேகத்தில் பல விசித்திரங்கள் நடைபெறுவ துண்டல்லவா! தீவிர ஒத்துழையாத் தலைவர்களின் செல்வாக்கு நாட்டில் வரவாக் குறைந்து வரலாயிற்று. புதிதாக ஏற்பட்ட சுயராஜ்யக் கட்சிக்கே பேராதரவு கிடைத்து வந்தது. பத்திரிகைக ளெல்லாங்கூட, சுயராஜ்யக் கட்சியின் கொள்கைகளைத்தான் அதிகமாக ஆதரித்தன. இப்புதிய மாறுதலை எதிர்த்து வேலை செய்யும் ஆச்சாரியார் போன்ற மாறுதல் வேண்டாத் தலைவர்களுக்கு எவ்வளவு சிரமமும் கஷ்டமும் ஏற்பட்டிருக்கும் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. ஆச்சாரியார் போன்றமாறுதல் வேண்டாத் தலைவர்கள் தான் தேச முன்னேற்றத்துக்கு முட்டுக்

கட்டையா யிருப்பதாக, சுயராஜ்யக் கட்சியை ஆதரிக்கும் தினசரி பத்திரிகைக ளெல்லாம் குறைகூறின.

1923 - வது வருஷம் செப்டம்பர் மாதம் டில்லியில் மௌலானா அபுல் கலாம் அஸாத் தலைமையில் கூடிய விசேஷ காங்கிரஸ் கூட்டத்தில், சட்டசபைப் பகிஷ்காரப் பிரசாரஞ் செய்யக்கூடாது எனத் தீர்மானிக்கப்பட்டது. ஆச்சாரியார் போன்ற மாறுதல் வேண்டாத் தலைவர்கள் நாட்டுமக்களின் அப்போதைய மனப்போக்கை யொட்டி ஏற்கனவே தங் களுக்குள்கூடி ஆலோசித்து சத்தியாக்கிரக தருமமுறையை யொட்டி, சுயராஜ்யக் கட்சியாரை எதிர்ப்பதில்லை என்று செய்து கொண்ட முடிவே மேற்படி தீர்மானம் எளிதாக நிறைவேறு வதற்குத் துணைபுரிந்தது. கடுமையான வயிற்று நோய் காரணமாக அடுத்த வருஷம் நிபந்தனையின்றி விடு தலை செய்யப்பட்ட மகாத்மா காந்தியும் கால தேச வர்த்த மானத்தை யொட்டி சுயராஜ்யக் கட்சியார் அவர்கள் விரும்பும் சட்டசபை வேலையைச் செய்வதற்கு அவகாச மளித்துப் பார்க்கவே விரும்பினார். எனவே, காந்தியடிகள் ஆதிக்கத்திலிருந்த காங்கிரஸ் மகாசபை தற்காலிகமாகச் சுயராஜ்யக் கட்சியார் ஆதிக்கத்தில் மாறியது. மகாத்மா காந்தியும், ஆச்சாரியார் முதலிய மாறுதல் வேண்டாத் தலை வர்களும் அரசியலிலிருந்து விலகி, கதர், மதுவிலக்கு, தீண்டாமை யொழிப்பு ஆகிய நிர்மாண வேலைத்திட்டங்களை நிறைவேற்றிவைக்கும் விஷயத்தில் தங்கள் முழு கவனத்தை யுஞ் செலுத்தித் தங்களாலான சேவையைச் செய்து வரலா யினர்.

---

## ஒன்பதாவது இயல்.

### காந்தி ஆசிரம ஸ்தாபனம்.

இச் சமயத்தில் தான் அதாவது 1924-வது வருடத்தில் தான் நமது ஆச்சாரியார், சேலம் ஜில்லாவிலுள்ள திருச்செங்கோடு என்னும் ஊரை அடுத்த புதுப்பாளையத்தில் காந்தி சேவா சங்கத்தின் சார்பாக காந்தி ஆசிரமத்தை நிறுவினார். இவ் வாசிரமத்துக்கு ஆச்சாரியாரது அத்யந்த நண்பரான இரத்தினசபாபதி கவுண்டர் சுமார் 12-ஏக்கர் நிலத்தை நன்கொடையாக அளித்தார். இவ் வாசிரம வாயிலாக ஆச்சாரியார், கதர், மதுவிலக்கு, தீண்டாமை யொழிப்பு ஆகிய நிர்மாண வேலைத்திட்டங்களை நிறைவேற்றி வைக்கும் வகையில் வேலை செய்து வரலானார். பெருஞ்செல்வந்தரும், தேசபக்தருமான சங்கர்லால் பாங்கர் சேலத்துக்கு விஜயஞ் செய்தபோது, ஆச்சாரியாரது தியாகத்தையும், தேசத் தொண்டையுங் கேள்விப்பட்டு, அரைலட்ச ரூபாய் அவருக்குக் கொடுத்துதவினார். ஆச்சாரியாரது சொந்த உபயோகத்துக்கென்றே சங்கர்லால் பாங்கர் கொடுத்த அப்பணத்தை அவர் ஆசிரமத்துக்கே அர்ப்பணஞ் செய்து விட்டார்.

ஆச்சாரியார் இக்காந்தி ஆசிரமத்துக்குத் தலைவரா யிருந்து வருவதோடு, தாமும் அவ் வாசிரமத்திலுள்ள தொண்டர்களைப் போலவே காலையிலிருந்து மாலைவரை வேலைசெய்து, மேற்குறித்த மூன்று நிர்மாணத்திட்டங்களை ஒழுங்காக நிறைவேற்றி வந்தார். புதுப்பாளையத்தில் இவ் வாசிரமம் ஏற்பட்டிருப்பதனால், மற்றவர்களைக் காட்டிலும் சுற்றுப்பக்கத்திலுள்ள கிராம மக்கள் ஆசிரமத்தாரால் பல நன்மைகளை யடைந்து வருகின்றனர். இவ்வாசிரம வாயிலாக ஆச்சாரியார் செய்துவரும் மதுவிலக்கு வேலையின் அருமை

யைப் பாராட்டி, அக்காலத்தில் கலால் கமிஷனராயிருந்த மிஸ்டர் காடரல் என்னும் ஐரோப்பியர் ஆசிரமத்தைச் சுற்றி யுள்ள 37 - மதுபானக் கடைகளை மூடிவிடும்படி செய்தார் என்றால், இவரது மதுவிலக்குத் தொண்டின் மேன்மையை என்னென்பது !

மதுவிலக்குப் பிரசாரத்தை வெற்றிகரமாக நடத்த வேண்டியே, ஆச்சாரியார் "விமோசனம்" என்னும் தமிழ் மாதப் பத்திரிகையையும், ஆங்கிலத்தில் "Prohibition" என்னும் மாதப்பத்திரிகையையும் சிலகாலம் நடத்தலானார். மதுபானஞ் செய்வது தீது என்பதைச் சிறு சிறு கதைகள் வாயிலாகவும், கட்டுரைகள் வாயிலாகவும் மக்களுக்கு எடுத்து விளக்கி வந்தார்.

இந்தியா முழுவதிலும் மதுவிலக்கு இயக்கத்தைத் திறம்பட நடத்தும் பொறுப்பை ஆச்சாரியாருக்கு மகாத்மா காந்தி முதலிய தலைவர்கள் ஒப்படைத்திருக்கிறார்களென்றால், நம்மைக் காட்டிலும் மற்றவர்கள் ஆச்சாரியாரின் சேவையை எவ்வளவு நன்றாக அறிந்திருக்கிறார்கள் என்று தெரிகிறதல்லவா ! இது வன்றி, கிறிஸ்தவ பாதிரிகள், பல திறப்பட்ட அரசியல் வாதிகள், அரசியலில் ஈடுபடாத சமூக சீர்திருத்த வாதிகள் முதலியோர் சேர்ந்து ஸ்தாபித்திருக்கும் அகில இந்திய மதுவிலக்குச் சங்கத்திற்கும், காங்கிரஸ் மதுவிலக்குக் கமிட்டிக்கும் காரியதரிசியாக இருந்தார்.

இந்தியாவில் முதன் முதலாக, தமிழ் நாடு தான் கதர் இயக்கத்தில் ஈடுபட்டது. அதிலும், திருப்பூர் கதர்த்துணிகளை உற்பத்தி செய்வதில் முதன்மை பெற்று விளங்கி இந்தியா முழுவதற்கும் வழங்கி வந்தது. தமிழ் நாட்டுக்கு இவ்வித புகழ் ஏற்படுவதற்கு ஆச்சாரியாரே மூலகாரணராவர். தமிழ் நாட்டைப் பொறுத்தவரையில் கதர் இயக்கத்

துக்குத் தந்தையென்று கூட ஆச்சாரியாரைக் கூறின் மிகையாகாது.

இவ்வளவு தூரம் காந்தி ஆசிரம வாயிலாக ஆச்சாரியார் அரும்பெரும் சேவை செய்தும், சுற்றுப்புறக் கிராம வாசிகள் இவ் வாசிரமத்தைப் பகிஷ்கரிக்க முயற்சிசெய்து வந்தனர். இதற்கு முக்கியகாரணம், இவ்வாசிரமத் தொண்டர்களில் அங்கமுத்து, முனிசாமி ஆகிய இரு ஆதித்திராவிடர்கள் கலந்திருந்ததே யாகும். இவ்விருவரும் சத்தியாக்கிரக இயக்கத்தில் ஈடுபட்டு சிறை சென்றவர்களாவர். தமிழ் நாட்டில் இவர்களைத் தவிர, வேறு ஆதித்திராவிடர்கள் சட்ட மறுப்புப்போராட்டத்தில் கலந்து சிறைசென்றதாகத் தெரியவில்லை. அரசியலில் கலப்பதற்குப் பல காலத்துக்கு முன்பே தீண்டாமை யொழிப்புக்குத் தீவிரமாக வேலை செய்துவந்த ஆச்சாரியார், சமூகப் பகிஷ்காரத்துக்கு ஆளான ஆச்சாரியார், இப்போது மட்டும் அதுவும் தீண்டாமை யொழிப்பு உட்பட நிர்மாணத் திட்டங்களை நிறைவேற்றி வரவேண்டிய இச் சமயத்தில் அதை விட்டு விடுவாரா என்ன! ஜாதி இந்துக்கள், பெரிய பெரிய உத்தியோகஸ்தர்கள், கவுன்ஸிலர்கள் முதலியோரின் பலத்த எதிர்ப்பை இலட்சியஞ் செய்யாத ஆச்சாரியாரா இக்கிராமவாசிகளின் எதிர்ப்புக்கு அஞ்சுபவர்? சுற்றுப்புறக் கிராம மக்களின் கிளர்ச்சியைச் சமாளித்துக்கொண்டு நம் ஆச்சாரியார் ஆசிரம வேலையை இன்னும் ஊக்கமாகச் செய்து வரலானார்.

ஒத்துழையாமைப் போராட்டத்தின்போது, வக்கீல் தொழிலை உதறித் தள்ளிய நம் ஆச்சாரியார், மீண்டும் எக் காரணத்தைக் கொண்டும் அதைமேற்கொள்வதில்லையென்ற விரதம் பூண்ட நம் ஆச்சாரியார், திருப்பதி கோயிலில் பிரவேசித்ததற்காகக் கைது செய்யப்பட்டுக் கோர்ட்டில்

ஆஜர் செய்யப்பட்ட ஆதித்திராவிடர்கள் சிலருக்காக, தாமே வலியப் போய் அவர்கள் சார்பாக வாதித்து அவர்களை விடுதலையடையச் செய்தாரென்றால், அவர் ஆதித்திராவிட சகோதரர்களின் உரிமைக்காக எவ்விதத் தியாகமுஞ் செய்யத் தயாராயிருக்கிறார் என்று நன்கு விளங்குகிறதல்லவா! ஆகவே, தமது ஆசிரமத்தில் தீண்டாமையை அநுஷ்டானத்தில் ஒழிக்க முயன்று வந்ததில் ஆச்சரியமொன்று மில்லை யன்றோ!

1929 - வது வருஷம் 24-ந் தேதியன்று வேதாரணியம் அரசியல் மகாநாடு நடக்க ஏற்பாடாயிருந்தது. அதற்குத் தலைமை வகிக்க சர்தார் - வல்லபாய் படேலை அழைத்திருந்தார்கள். அச் சமயத்தில் தமிழ் மாகாண காங்கிரஸ் கமிட்டித் தலைவராயிருந்த ஸ்ரீஜத் எஸ். ஸ்ரீநிவாஸ ஐயங்கார் பூரண சுதந்தரத் தீர்மான விஷயத்தில் சர்தார் படேலுடன் மாறுபட் டிருந்ததால் அவர் வருகையை விரும்பவில்லை. இதை எவ்விதமோ அறிந்த சர்தார் தாம் மகாநாட்டுக்கு வர முடியாதென்று கூறி மறுத்து விட்டார். இதனால் மகாநாடே நடைபெறாது நின்று விடும்போ லிருந்தது. காந்தி ஆசிரமத் தலைவராயிருந்த ஆச்சாரியார் இச்சங்கட நிலைமையைத் தவிர்க்க முன் வந்து, மகாத்மா காந்திக்குத் தந்தியடித்து வல்லபாயை எவ்விதமும் வேதாரணிய மகாநாட்டுக்கு அனுப்பும்படி வேண்டிக் கொண்டார். எனவே, மகாத்மா காந்தி கட்டளைப்படி சர்தார் வல்லபாய் படேல் தமிழ் நாட்டுக்கு விஜயஞ்செய்து, வேதாரண்யம் மகாநாட்டுக்குத் தலைமை வகித்து அதை இனிது நடத்திவைத்தார். நம் ஆச்சாரியாருக்கும் ஸ்ரீஜத் ஸ்ரீநிவாஸ ஐயங்காருக்கும் அரசியல் விஷயத்தில் எத்தனையோ அபிப்பிராய பேத முண்டு. இருப்பினும், சமயம் வாய்க்கும்போது அவ்

வபிப்பிராய பேதங்களையெல்லாம் மறந்துவிட்டு, இவ்விதம் ஒத்துழைத்து உதவிபுரிய விரைந்து வருவார். இது ஆச்சாரியாரது சிறந்த நற்குணங்களி லொன்ருகும்.

ஆச்சாரியார் காந்தி ஆசிரமத்துக்குத் தலைவரா யிருந்தாலும், மற்ற ஆசிரமத் தொண்டர்களைப் போலவே தாமும் ஒரு சிறு குடிசையில், ஏழைக் கிராம வாசியைப் போல் வசித்து எளிய வாழ்க்கையை நடத்தி வந்தார். அவருடன் அவரது கடைசிக் குமாரன் நரசிம்மனும், இளைய குமாரி லக்ஷ்மியும் இருந்து வந்தனர். அது வன்றி, இவரது சகோதரர் குமாரர்களைப் பாதுகாக்கும் பொறுப்பும் இவருக்கு இருந்து வந்தது.

ஆச்சாரியார் கிராம புனருத்தாரணத்துக்குரிய நிர்மாண வேலைகளைத் திறம்பட நிறைவேற்றி வைக்கும் ஆற்றலைக் கண்டே, தமிழ் நாடு கதர் போர்டையும் ஹரிஜன சேவா சங்கத்தையும் முறையே இவரது தலைமையிலும், ஆதிக்கத்திலும் விட்டிருந்தனர். ஆந்திரா கதர் போர்டு இவர் வசத்தில் வருவதற் கிருந்தது. அகில பாரத சர்க்கா சங்கத்திலும், காந்தி சேவா சங்கத்திலும் ஆச்சாரியார் பிரதான புருஷராய்க் கருதப்படுகிருர். இவர் விஜயஞ் செய்யாது மேற்படி சங்கங்களின் கூட்டமெதுவும் நடைபெறுவதில்லை யென்ருல் இவரது சேவையில் வட நாட்டுத் தலைவர்கள் எவ்வளவு மதிப்பு வைத்திருக்கிருர்கள் என்று அறிந்து கொள்ளலாம்.

---

## பத்தாவது இயல்.

### உப்புச் சத்தியாக்கிரகத் தலைவர்.

இவ்விதம், தீண்டாமை யொழிப்பு, மதுவிலக்கு, கதர் அபிவிருத்தி ஆகிய நிர்மாணத் திட்டங்களில் வெகுவாகக் கவனஞ் செலுத்தித் தீவிரமாக வேலைசெய்து வந்த நம் ஆச்சாரியார் 1930-வது வருட ஆரம்பத்தில் மீண்டும் அரசியலில் கலந்துகொள்ள வேண்டிய அவசியம் ஏற்பட்டது. இவ் வருஷத்தில் லாகூரில் காங்கிரஸ் நடைபெற்றது. பண்டித ஜவஹர்லால் நேரு தலைமை வகித்தார். அக் காங்கிரஸில் மகாத்மாவுக்கு மீண்டும் செல்வாக்கு ஏற்பட்டது. காந்தியடிகளின் சத்தியாக்கிரக தத்துவத்தின் உயர்வும், நிர்மாண வேலைத்திட்டங்களின் மேன்மையும் தேசியத் தலைவர்களுக்குப் புலப்பட்டது. சுயராஜ்யக் கட்சியினர் கோலிய சட்டசபை வேலைகளினால் எதிர்பார்த்த பலன் எதுவும் விளையாததனால், நிஷ்பிரயோஜனமான அவ்வேலையைக் கைவிடுவதே அறிவுடைமையாகும் எனப் பண்டித மோதிலால் நேரு போன்ற தலைவர்கள் உணரலாயினர். ஆகவே, லாகூர் காங்கிரஸில் காந்தி யடிகளின் ஆலோசனைகளே முக்கிய மாகக் கவனிக்கப்பட்டன. முடிவில், மீண்டும் மகாத்மா காந்தி அரசியலில் தலைமைப் பதவியேற்று, பரிபூரண சுயராஜ்யபத்துக்காக, சாத்விக சட்டமறுப்புப் போர் நடத்துவது என அக் காங்கிரஸில் தீர்மானிக்கப்பட்டது. ஆகவே, மகாத்மாவின் சத்தியாக்கிரக தத்துவத்தில் பெரு நம்பிக்கை கொண்டுள்ள தலைவர்களே காங்கிரஸ் காரியக் கமிட்டியில் அங்கத்தினர்களாகத் தேர்ந்தெடுக்கப் பட்டனர். அவ்வாறு நியமிக்கப் பட்டவர்களில் நமது ஆச்சாரியாரும் ஒருவர் என்பதைக் கூறவும் வேண்டுமோ !

லாகூர் காங்கிரஸை யடுத்து, வேலூரில் தமிழ் மாகாண மகாநாடு கூடியது. அதில், மகாத்மா ஆரம்பித்திருக்கும் சட்ட மறுப்புப்போருக்கு முழு ஆதரவு தந்ததோடு, அதைத் தமிழ் நாட்டில் தலைமைவகித்துத் திறம்பட நடத்த நம் ஆச்சாரியாருக்கே சர்வாதிகாரங் கொடுக்கப்பட்டது. எனவே, நம் ஆச்சாரியார் பழையபடி தமிழ் நாட்டு அரசியலில் தலைமைப்பதவி வகிக்கவேண்டிய பொறுப்பு ஏற்பட்டுவிட்டது. இம்மகா நாட்டைத் தொடர்ந்து திரிச்சியில் நடைபெற்ற மகாநாட்டில் நம் ஆச்சாரியாரே தமிழ் மாகாண காங்கிரஸ் கமிட்டித் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார்.

மகாத்மா காந்தி தமது சட்டமறுப்புப் போரை ஆரம்பித்து விட்டார். சரித்திரப் பிரசித்திபெற்ற உப்பள முற்றுகையைச் செய்ய தண்டியிலிருந்து புறப்பட்டு விட்டார். அவரைப் பின்பற்றித் தேசத்தலைவர்களும், மற்றவர்களும் திரள் திரளாக அப்போரில் இறங்கிவிட்டனர்.

மகாத்மா தண்டி யாத்திரை செய்ததுபோல், நம் ஆச்சாரியாரும் திரிச்சியிலிருந்து, தஞ்சையைச் சேர்ந்த வேதாரணியத்துக்கு, ஏப்ரல்மீ 13-ந் தேதி (தமிழ் வருஷப்பிறப்பு பிரமோதூத வருஷம் முதல் தேதி) யன்று தமது தொண்டர் படையுடன் புறப்பட்டு விட்டார். ஆச்சாரியார் வேதாரணியம் கடற்கரையில் போய் உப்பளமுற்றுகை யிடப்போகிறார் என்ற செய்தி யறிந்ததுமே, தஞ்சை ஜில்லா கலெக்டர் மிஸ்டர் தாரன் துரை, இச்சட்ட மறுப்பாளருக்கு எவ்வித உதவியோ உபசாரமோ யாருஞ் செய்யக்கூடாதென்று தடையுத்தரவு போட்டார். இவ்விதம் கலெக்டர் பயமுறுத்தியும் பொதுமக்கள் சிறிதும் அஞ்சாது, உள்ளிருந்து எழும் தேசபக்தி யுணர்ச்சி யுந்த, நமது ஆச்சாரியாருக்கும், அவரது தொண்டர் படைக்கும்

வழிநெடுக ராஜோபசாரஞ் செய்து, தங்களது மனப்பூர்வமான ஆதரவையும் ஆசியையும் வெளிப்படுத்தினர்.

திரிச்சியில் ஏப்ரல்மீ 13-ந் தேதி ஆச்சாரியார் தொடங்கிய கால்நடைப் பிரயாணம் 28-ந் தேதி வேதாரணியத்தில் முடிவுற்றது. இப் பதினைந்து நாள் கால்நடைப் பிரயாணமே தமிழ்நாட்டு மக்களையெல்லாம் தட்டியெழுப்பியது. தமிழ் இளைஞர்களும் பெண்மணிகளும் வீறிட்டு எழுந்து போரில் கலந்தனர்.

ஆச்சாரியார் உப்பளப்போரைத் தொடங்குவதற்கு முன் 29-ந் தேதியன்று முழுதும், அவரும், அவரது தொண்டர் படையினரும் உபவாசம் இருந்தனர். இவ்விதம் உபவாசமிருந்து கடவுளைப் பிரார்த்தனை செய்த பின்னரே, மறுநாள் 30-ந் தேதியன்று ஆச்சாரியார் 16-தொண்டர்களோடு கடற்கரை சென்று, அநீத உப்புச் சட்டத்தை மீறி உப்பை யள்ளினர். அடுத்த கணமே ஜில்லா போலீஸ் சூபரின்டெண்டெண்டு நம் ஆச்சாரியாரைக் கைது செய்தார்.

மன்னார்குடி சப் டிவிஷனல் மாஜிஸ்டிரேட்டு முன் ஆச்சாரியார் வழக்கு விசாரணைக்கு வந்தது. உப்புச்சட்டம் 74-வது பிரிவின்படியும் இ. பி. கோ. 145-வது பிரிவின்படியும் ஆச்சாரியார் குற்றஞ் சாட்டப்பட்டார். ஆச்சாரியார் தம்மீது சாட்டப்பட்ட குற்றங்களை மறுக்கவில்லை; எதிர் வழக்காடவுமில்லை. மாஜிஸ்டிரேட் 'ஏதாயினுங் கூறப் போகிறீர்களா' என்று கேட்டும், சொல்வதற்கு ஒன்றுமில்லை என்று ஆச்சாரியார் கூறிவிட்டார். எனவே, மாஜிஸ்டிரேட், ஆச்சாரியார் குற்றவாளியெனவே தீர்மானித்து, முதல் குற்றத்துக்கு 200-ரூபாய் அபராதம் அல்லது மூன்றுமாத வெறுங்காவல், இரண்டாவது குற்றத்துக்கு

ஆறுமாத வெறுங்காவல் ஆக ஒன்பது மாதம் சிறைவாசத் தண்டனை யளித்தார். ஆனால், ஆச்சாரியாரை முதல் வகுப்புக் கைதியாக நடத்த வேண்டுமென்று உத்தரவிட்டார். ஆச்சாரியார் தமக்கு எவ்விதத் தனிச்சலுகையுங் காட்ட வேண்டாமென்று கேட்டுக் கொண்டார். ஆயினும், மாஜிஸ்டிரேட் 'என் கடமையை நான் செய்கிறேன்' என்று கூறித் தம் உத்தரவை உறுதிப்படுத்தினார்.

ஆச்சாரியாருக்குச் சிறைவாசத் தண்டனை யளிக்கப் பட்ட செய்தி பரவியதும், தமிழ்நாட்டின் பல பாகங்களிலும் வேலை நிறுத்தங்கள் நடந்தன. சர்க்கார் அடக்குமுறையைக் கண்டித்து பல பொதுக்கூட்டங்கள் நடைபெற்றன.

ஆச்சாரியாரை முதலில் திரிச்சி சிறையில் ஒருவாரம் வைத்திருந்தனர். பிறகு அவரைச் சென்னைச் சிறைச் சாலைக்கு மாற்றி விட்டனர்.

தமிழ்நாட்டில் முதன் முதலாக ஆச்சாரியாரால் ஆரம்பிக்கப்பட்ட உப்பளப்போர் அவரது சிறைவாசத்துக்குப் பிறகு நாடெங்கணும் காட்டுத்தீப்போல் வெகு வேகமாகப் பரவிவிட்டது. ஆங்காங்கு பெரிய பெரிய தகுதியிலும் செல்வத்திலும் ஆழ்ந்திருந்த பிரமுகர்களும் வாலிபர்களும் பெண்மணிகளும் எல்லாம் இச்சட்டமறுப்பு இயக்கத்தில் ஈடுபட்டு ஆயிரக்கணக்காகச் சிறை செல்லலாயினர். ஆச்சாரியாருக்குப் பிறகு, வேதாரண்யம் உப்பளப் போரை ஸ்ரீமான்கள் வேதரத்தினம்பிள்ளை, கே. சந்தானம், மட்டப்பாறை வெங்கடராம ஐயர், அண்ணாமலைப்பிள்ளை, பந்துலு ஐயர், என். எஸ். வரதாச்சாரி, வைத்தியநாத ஐயர், கே. எஸ். சுப்பிரமணியம் ஆகியோர் தொடர்ந்து நடத்திச் சிறை சென்றனர்.

இதனிடையே காந்தி-இர்வின் ஒப்பந்தம் ஏற்பட்டதல்லவா! அதன் காரணமாக, மற்ற தலைவர்களோடு ஆச்சாரியாரும் விடுதலை செய்யப்பட்டார். இவ்வாறு முதல் சட்டமறுப்பு இயக்கந்தொடங்கி எல்லாத் தலைவர்களும் சிறைக்குப் போன பிறகு ஆச்சாரியார் மேற்சொன்ன காரணத்தால் சிறையிலிருந்து வெளி வந்தாரல்லவா! அப்போது ஸ்ரீஜத் சத்தியமூர்த்தி தம் சொந்த அசௌகரியங்களையுத்தேசித்து சட்டமறுப்பில் தீவிரமாக ஈடுபடவில்லை. இதனால் பொதுமக்களும் மற்ற காங்கிரஸ்காரர்களும் அவர்பால் அதிருப்தி கொண்டனர். இச்சமயம் ஆச்சாரியார் ஸ்ரீஜத் சத்தியமூர்த்தியிடஞ் சென்று, "தங்களுக்கு அசந்தர்ப்பங்கள் பல இருக்கலாம்; ஆனால் இச்சமயத்தில் காங்கிரஸை விட்டுக் கொடுக்கலாமா" என்று உருக்கமாகக் கூறினர். அதற்குப்பிறகே ஸ்ரீஜத் சத்தியமூர்த்தி சட்டத்தை மீறிச சிறை சென்றார்.

ஆச்சாரியார் மீண்டும் மூன்றாவது முறையாக அவசரச் சட்டங்களின் கீழ்க் கைது செய்யப்பட்டு சிறைத் தண்டனை விதிக்கப்பட்டார். இவ்வித சிறைவாச காலங்களில் தான் நம் ஆச்சாரியார் தமிழ் மொழி வளர்ச்சிக்கான முயற்சியில் ஈடுபடலானர்.

---

## பதினோராவது இயல்.

### தமிழ் இலக்கிய சேவை

மனிதனாய்ப் பிறந்த ஒவ்வொருவனும் தான் பிறந்த நாட்டுக்கும், சமூகத்துக்கும், தாய் மொழிக்கும் தன்னாலான சேவையைச் செய்ய வேண்டுமென்னும் உண்மையை நமது ஆச்சாரியார் தமது வாழ்க்கையில் நடத்திக் காட்டியிருக்கிறார் என்பது அவரது வாழ்க்கை வரலாற்றைப்

படிக்கும் நாம் தெரிந்துகொள்ளலாம். இத்துடன் தாய் மொழி வளர்ச்சிக்காகத் தன்னாலான தொண்டைச் செய்து வந்திருக்கிறார்.

ஆச்சாரியார் என்று சமூக சீர்திருத்தத் துறையில் தீவிரமாக இறங்கினாரோ அன்றிருந்தே சாதாரண பாமர மக்களுக்கும் புரியக்கூடிய வகையில் எளிமையாகவும், இனிமையாகவும் தமிழிலேயே பேசி வருகிறார். ஆங்கிலத்தில் இரண்டு எழுத்து பட்டம் வாங்கிவிட்டால், தங்களைச் சீமையில் பிறந்த ஐரோப்பிய பிரபுக்களென நினைத்து இறுமாந்து; 'எனக்குத் தமிழ் சரியாகப் பேசவே வருவதில்லை; சார்,' 'தமிழ் மொழியே அடியோடு மறந்துபோய் விட்டது' என்றெல்லாம் பெருமையாகவும், கௌரவமாகவும் பேசிக்கொள்ளும் பிரகிருதிகள் நம் நாட்டில் அநேகமாக இருக்கின்றன வல்லவா! அவ்விதமில்லாது நம் ஆச்சாரியார் ஆங்கிலம் பேசவேண்டிய அவசியம் நேர்ந்தாலல்லது தமிழிலேயே பேசுவதையே பெரும்பாலும் வழக்கமாகக் கொண்டிருக்கிறாரென்றால், அவரது தாய் மொழிப்பற்றை என்னென்பது!

ஆச்சாரியாரது பேச்சு கேட்போருக்கு அறிவுவிருந்தாயிருக்கும். சிலரைப்போல் வழவழாவென்று வெகுநேரம் பேசிக் காலத்தைப் போக்கி வீணாக்காது, எவ்வளவு பெரிய விஷயங்களையும் சுருக்கமாகச் சொல்லி விளங்க வைப்பார். அரசியல் விஷயங்களும் சரி; மற்றெந்த விஷயங்களாயினும் சரி; எவ்வளவு சிக்கலாக இருந்தாலும், அவைகளைப் பொருத்தமான உதாரணங்களோடு தெளிவுபடுத்தி விளக்கிப் பேசும் ஆற்றல் ஆச்சாரியருக்கே உண்டு. கதர்த்திட்டம், மதுவிலக்கு, தீண்டாமை போன்ற கவர்ச்சியில்லா விஷ

யங்களைக்கூட, தமது சாதுரிய மிக்க பேச்சால் மிகவும் சுவாரஸ்யமாகச் செய்துவிடுவார். அவரது ஒவ்வொரு பிரசங்கத்திலும் உயர்தரமான நகைச்சுவை ததும்பி நிற்கும்.

ஆச்சாரியார் சிறந்த பேச்சுவன்மை வாய்ந்தவரல்லர் என்று சிலர் கருதுகிறார்கள். எழுத்து வாசனையே யறியாத பட்டிக்காட்டு ஜனங்களுக்கும் புரியும்படியாகக் கொச்சை கொச்சையான தமிழிலும், கிராமிய பாஷையிலும் அவர் பேசுவதால்தான் அவ்வாறு தவறாக நினைக்கிறார்கள் என்று நான் கருதுகிறேன். பேச்சின் இலக்கணம், தத்துவம் என்ன என்பதை அவர்கள் அறிவார்களானால், இவ்விதம் தவறாகக் கருதமாட்டார்கள். திருவள்ளுவர் பெருமான் சொல்லின் இலக்கணம் இன்னது என்று விளக்கிக் கூறு வதைக் கேளுங்கள்:—

“ கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாஞ் சொல் ”

தமக்கு வேண்டிய நண்பர்களையே யன்றிப் பகைவர் முதலிய மற்றவர்களையும் வயப்படுத்தும்படி பேசுவதே சொல் என்று பறைசாற்றி யிருப்பதைக் கூர்ந்து கவனிக்க வேண்டும். தமது பேச்சுக்கு அரசியல் எதிரிகளும் மறு பேச்சு சொல்லமுடியாதபடி, அளந்து பேசக்கூடிய பே ராற்றல் வாய்ந்த ஆசாரியாரைப் பேச்சு வன்மையற்றவர் என்று சொன்னால் வேறு யாரைத்தான் பெரும் பேச்சாளர் என்று கூறுவதென்று எனக்குப் புரியவில்லை. ஆங்கிலத்தில் பெரிய பெரிய வார்த்தைகளைப் போட்டு மூச்சுவிடாது பேசிப் பிரமிக்கவைக்கும் வழக்கம் ஆச்சாரியாரிடம் இல்லை யென்று வேண்டுமானால் சொல்லிக் கொள்ளலாமே

யொழிய, ஆங்கிலத்திலும் வாதத் திறமையோடு சரளமாகப் பேசுவதில் பெரும் பேச்சாளிகள் எவருக்கும் எவ்விதத் திலும் அவர் சளைத்தவரல்லர். தமிழ்நாட்டைப் பொறுத்த வரையில், காங்கிரஸ் மகாநாடுகளிலும் பிரசாரக் கூட்டங் களிலும் தமிழ் மொழிக்கே முக்கிய ஸ்தானத்தை யேற் படுத்தியவர் ஆச்சாரியார் என்றால் அது மிகையாகாது. ஆங்கிலத்திலேயே பேசும் பழக்கமுடைய பெருந்தலைவர் களை யெல்லாங்கூட, தமிழ் மொழியில் பேசும்படி செய்த பெருமை ஆச்சாரியாருக்கே உரியதாகும்.

நம் ஆச்சாரியார் சேலத்தில் வக்கீல் தொழிலில் ஈடு பட்டிருக்கும்போதே, தமிழ் மொழிவளர்ச்சியில் பேரார்வ முடைய சில அறிஞர்களோடு சேர்ந்து, "Tamil Scientific Terms Society" என்ற பெயருடன் ஒரு சங்கத்தை நிறுவி, அதன் சார்பில் பத்திரிகை யொன்றும் நடத்தினர். ஆனால், தமிழறிஞர்கள் பலர் போதிய ஆதரவு காட்டாமையால், சில மாதங்களிலெல்லாம் இம்முயற்சி நின்றுபோய் விட்டது.

ஆச்சாரியார் தமிழில் பல நூல்களை யெழுதியிருக்கிறார். சிறைவாச அனுபவம், ஸோக்ரதர், கண்ணன் காட்டிய வழி, குடி கெடுக்குங் கள், மார்க்க அரேலியர் உபதேச மொழிகள், இராஜாஜீ குட்டிக் கதைகள், உபநிஷத் கதைகள், திருக் குறள் ஆங்கில மொழி பெயர்ப்பு முதலிய அவரது நூல்கள் தமிழ் மொழியின் மறுமலர்ச்சிக்கும் தமிழ் இலக்கிய வளர்ச் சிக்கும் அவர்செய்த அரிய சேவையின் பரிணாமங்களாகும். இன்னும் புத்தகமாக வராத சிறுகதைகளும், கட்டுரைகளும் அநேகம் இருக்கின்றன.

ஆச்சாரியாரது நூல்கள் அனைத்தும் தனிச்சிறப்பு வாய்ந்தவை. அவரது சிறுகதைகளும், கட்டுரைகளும்

பெரும்பாலும், மதுவிலக்கு, தீண்டாமை யொழிப்பு, கதர் அபிவிருத்தி ஆகிய நிர்மாண வேலைத்திட்டங்களை யடிப் படையாகக்கொண்டே எழுதப்பட் டிருக்கின்றன என்பதை அவைகளைப் படித்த நண்பர்கள் அறிவர். படிப்பவர் உள் ளங்களை அப்படியே கவர்ந்து சீர்திருத்த உணர்ச்சியையும், தேசபக்தியையும் தூண்டிவிடும் சக்தி வாய்ந்தனவாய் அவை இருப்பதோடு, சமரசம், சகோதரத்துவம் ஆகிய நன்னெறி களில் கொண்டு சேர்க்கும் தன்மை வாய்ந்தனவாயு மிருக் கின்றன என்றால் மிகையாகாது.

அரசியலில் சேர்வதற்கு முன்னர் ஆச்சாரியாருக்குச் சமஸ்கிருதந் தெரியாது. காந்தி ஆசிரமத்தை ஸ்தாபித்த பிறகு அவர் சமஸ்கிருதத்தைப் பயின்றிருக்கிறார் என்று தெரிகிறது. அதன் பயனை நாம், 'கண்ணன் காட்டியவழி,' 'உபநிஷத்கதைகள்' ஆகிய நூல்கள் வாயிலாகக் காண்கிறோம். இவ்விரு நூல்களிலும் முறையே பகவத்கீதையின் தத்துவங் களையும், உபநிஷதங்களின் உண்மைகளையும் விளக்கித் தம்மைப்போலவே மற்றவர்களும் சுவைத்துப் பயன் பெறும் வகையில் அளித்திருக்கிறார். கடைசியாக அவர் திருக்குற ளுக்கு எழுதிய வியாக்கியானத்தை மட்டும் ஆங்கிலத்தில் எழுதியிருக்கிறார். தமிழ்மொழி இலக்கிய மறுமலர்ச்சிக்காக சேவை செய்த ஸ்ரீயுத வ. வே. சு. ஐயர், ஸ்ரீ அ. மாதவையா ஆகியவர்களைப்போல், இவரும் திருக்குறளின் மாண்பையும், தமிழ் இலக்கியங்களின் சிறப்பையும் பிறமொழியாளரும், பிற நாட்டாரும் அறிந்து பாராட்டவேண்டுமென்ற பெரு நோக்கோடேயே இவ்வாறு ஆங்கிலத்தில் மொழி பெயர்த் திருக்கவேண்டும் என்று நான் கருதுகிறேன். இவ்விதம், தமக்குள்ள பல்வித அரசியல், சமூக சீர்திருத்த வேலைக ளோடு தமிழ் மொழி வளர்ச்சிக்கு ஆக்கந் தேடும் வகையில்

பல நூல்களை இயற்றித் தமிழ் மக்களிடையே சமர்ப்பித்து வருவதால், தமிழ் இலக்கிய உலகில் ஆச்சாரியார் ஒரு உன்னத ஸ்தானத்தைத் தேடிக்கொண்டார் என்றும், பிற் காலத்தில் தமிழ்மொழி மறுமலர்ச்சிக்காகப் பாடுபட்ட பெரியார்கள் பெயர்களோடு நம் ஆச்சாரியாரது பெயரும் பொன்னெழுத்துக்களால் பொறித்து வைக்கப்படும் என் றும் நான் துணிந்து கூறுவேன். முதன்முதலாக எழுதப் பட்ட சிறைவாச அநுபவம், ஸோக்ரதர் ஆகிய நூல்களுக் கும், சமீபத்தில் ஒன்றன் பின்னொன்றாக வெளிவந்திருக்கும் நூல்களுக்கும் இடையே அவரது உரைநடையில் எவ் வளவோ அபிவிருத்தியும், சீர்திருத்தங்களும் ஏற்பட்டிருக் கின்றன.

இவற்றிலிருந்து, ஆச்சாரியார் பெயரளவில் ஆச்சாரி யாராக இல்லாது, அரசியலில் மட்டும், ஆச்சாரியாராக இல்லாது, சமூக வியலில் மட்டும் ஆச்சாரியாராக இல்லாது மொழிக்கும் முதல்வராக - ஆச்சாரியாராக இருக்கிறார் என் றால், அவரது விடா முயற்சியையும் பேருழைப்பையும் என் னென்பது! நாட்டுக்கும், சமூகத்துக்குமேயல்லாது மொழிக் கும் அவர் செய்த அருஞ்சேவையை என்னென்பது! தம் குடும்பத்துக்கு அல்லது வம்சத்துக்கு ஏற்பட்ட ஆச்சாரிய பீடத்தை அதாவது தமிழ் நாட்டில் ஒரு சிறு பிரிவான வைஷ்ண ஐயங்கார் சமூகத்துக்கு மட்டும் உரியதாக ஏற் பட்ட ஆச்சாரிய பீடத்தை-நம் ஆச்சாரியார் தமது அருஞ் சேவையால் உண்மையான சிறப்புடைய தாக்கி - தம் சமூ கத்துக்கு மட்டுமல்லாது, தமிழ் நாடு முழுவதுக்குமே ஆச்சாரியாராக இருக்கிறார் என்றால், உலகில் அடையும் பெரும்பேறுகளில் முதன்மை வாய்ந்ததாக இதைக் கருதி னால் இழுக்காகாதன்றோ!

## பன்னிரண்டாவது இயல்

### லக்ஷ்மி - தேவதாஸ் திருமணம்.

நம் ஆச்சாரியார் வாழ்க்கையிலேயே முக்கியமாக குறிப்பிடத்தக்க - மிகவும் புரட்சிகரமான - சம்பவம் அவரது இளையமகள் லக்ஷ்மியினுடைய விவாக நிகழ்ச்சியாகும். இக் கலியாணம் காதல் மணம் மட்டுமல்ல; கலப்பு மணமுமாகும். மணமகள் பிராம்மணகுலம், மணமகன் வைசியகுலம்; மணமகள் பாஷை வேறு; மணமகன் பாஷை வேறு. அவ்விதமே சமயமும். இவ்வளவு வேறுபாடுக ளிடையே மணமக்கள் மனம் ஒன்றுபட்டதால், ஆச்சாரியார் இதை முழுமனதுடன் வரவேற்றார்.

எத்தனையோ ஆசார சீர்திருத்தக்காரர்கள் மேடைகளில் அழகாகப் பேசுவார்கள்; பிறருக்குச் சீர்திருத்த விஷயங்களை உருக்கமாக எடுத்து உரைப்பார்கள். ஆயினும் தங்கள் சொந்த விஷயத்தில் அவ்வித சீர்திருத்தங்களெல்லாம் இருந்த இடம் தெரியாமல் ஓடிப்போய்விடும். பேச்சளவில் பிரமாதப்படுத்தும் அவர்கள் கிரியாம்சையில் வரும்போது பின்னடைந்து போலிக்காரணங்களில் புகுந்து கொள்ள முயல்வார்கள். நம் ஆச்சாரியாரோ சமூக சீர்திருத்த விஷயங்களி லாகட்டும்; அரசியலி லாகட்டும்; தாம் சொல்லுகிறபடியே செயலிலும் செய்து காட்டுபவர். இதை அவரது வாழ்க்கையில் நடந்த பல சம்பவங்களால் அறியலாம். அதிலும் லக்ஷ்மியின் கலியாண விஷயம் ஆச்சாரியாரின் சீர்திருத்தங்களுக் கெல்லாம், சிகரம் வைத்ததுபோலாகும். எக்காரணத்தாலோ யாரோ ஒரு சிலரால் ஏற்படுத்தப்பட்ட சாதி, சமய வேற்றுமைகளில் தமக்குச் சிறிதும் நம்பிக்கை

யில்லை என்பதை இவ்வரிய செயலால் இனிது எடுத்துக் காட்டி விட்டார்.

உப்பளப் போர், சட்டமறுப்பு ஆகியவை ஆரம்பிப் பதற்குமுன், மகாத்மாவின் அருமைக் குமாரரான தேவ தாஸ் காந்தி ஹிந்தி பிரசார சம்பந்தமாகத் தமிழ்நாட்டுக்கு விஜயஞ்செய்தார். அப்போது தமிழ் நாட்டில் சுற்றுப்பிர யாணஞ்செய்து வருகையில், தேவதாஸ் திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்தில் சிலநாட்கள் நம் ஆச்சாரியாருடன் தங் கினர். அச்சமயம், தேவதாஸும் நம் ஆச்சாரியார் இளைய புதல்வியான லக்ஷ்மியும் ஒருவரை யொருவர் சந்தித்தனர்.

" ..............................................................
கண்ணொடு கண்இணைகவ்வி ஒன்றை யொன்று
உண்ணவு(ம்) நிலைபெறாது உணர்வும் ஒன்றிட
அண்ணலு(ம்) நோக்கினன் அவளும் நோக்கினள். "

" பருகிய நோக்கெனும் பாசத்தால் பிணித்து
ஒருவரை யொருவர்தம் உள்ளம் ஈர்த்தலால்
வரிசிலை அண்ணலும் வாட்கண் நங்கையும்
இருவரு(ம்) மாறிப்புக்கு இதயம் எய்தினர். "

" மருங்கிலா நங்கையும் வசையில் ஐயனும்
ஒருங்கிய இரண்டேற்கு உயிர்ஒன்று ஆயினர். "

என்று கவியரசர் கம்பர் பெருமான் ஸ்ரீராமன் - சீதா பிராட்டியின் சந்திப்பை வருணிக்கிறாரல்லவா! அந்நிலைமை யனைத்தும் நமது தேவதாஸ் - லக்ஷ்மியின் சந்திப்புக்கும் முற்றும் பொருந்துமென்று கூறலாம். இருவரும் நெருங்கிப் பழகுவதற்குச் சந்தர்ப்பம் ஏற்பட்டதால் ஒருவர் கருத்தை மற்றொருவர் அறிந்து கொள்வதற்கு முடிந்தது. இவர்கள் காதல் பார்த்தவுடனே கொள்ளும் வெறும் மோகமாக

இல்லாது, ஒருவரையின்றி மற்றொருவர் வாழ முடியாத உண்மைக்காதலாகவே இருந்தது.. சில நாட்களுக்கெல்லாம், இவர்களிடையே முகிழ்த்த காதல் செழித்தோங்கி வளர்ந்து கனிந்த நிலையை யடைந்து விட்டது. இவர்களது காதல் நமது ஆச்சாரியாருக்குத் தெரிந்தது. அவர் இத்தொடர்பு அநுசிதமென்றோ, முறையற்றதென்றோ, கொள்ளத்தகாத சம்பந்த மென்றோ கூறித் தடுக்கவில்லை. அவர்தான் சாதி சமய வேற்றுமை கடந்த பெரியாராயிற்றே! உண்மையான காதலால் ஒன்றுபட்ட உள்ளத்தவர்களான இளைஞர்கள் கூட்டுறவைச் சிதைக்க விரும்புவரோ! அவர் இவர்களது காதலுக்கு நல்லாசி கூறினரென்றே சொல்லவேண்டும். ஆனல் இவ்விஷயம் மற்றவர்களுக்குத் தெரியவே தெரியாது.

தேவதாஸ் காந்தி சில நாட்களுக்கெல்லாம் தமது தமிழ் நாட்டுச் சுற்றுப்பிரயாணத்தை முடித்துக்கொண்டு தம் ஊருக்குச் சென்றார். மகாத்மா காந்திக்கு தம்மகனது காதல் விஷயம் முறையே எட்டியது. அவரும் இத்தொடர்பைத் துணிக்க விரும்பவில்லை. ஆயினும் இளைஞர்களாகிய இவர்களிடையே ஏற்பட்டிருக்கும் காதல் உண்மையானதா? உறுதியானதா? என்று அறிய விரும்பினர். ஆகவே, அவர் இருவருக்கும் ஒரு கடுமையான நிபந்தனையை விதிக்கலானர். 'ஐந்து ஆண்டுகள் வரை காதலர்கள் தங்கள் கலியாண விஷயத்தைப்பற்றியே நினைக்கக் கூடாது. அந்த ஐந்து வருடங்களும் ஒருவரை யொருவர் பார்க்கவோ கடிதப் போக்கு வரத்து வைத்துக்கொள்ளவோ கூடாது. இவ்விதம் கழித்த ஐந்து வருடங்களுக்குப் பின்னரும் அவர்கள் இப்போது கொண்டுள்ள காதலினின்றும் வழுவாமலிருந்தால் அவர்கள் திருமணஞ்செய்து கொள்வதற்கு முழு சம்மதமும் அளிப்பதாக மகாத்மா கூறினர்.

" அவ்விதமே இளங்காதலர்கள் இருந்தனர். ஐந்து வருஷங்களும் விரைந்தோடின. ஆயினும் மகாத்மா சோதனை செய்தது அமையாதென்று கடவுளுஞ் சோதனை செய்ய நினைத்தான் போலும்! மகாத்மா இரண்டாவது வட்ட மேஜை மகாநாட்டுக்குப் போய் விட்டு லண்டனிலிருந்து திரும்பி வந்தார். சர்க்கார் அவரைக் கைதுசெய்து எரவாடா சிறைச்சாலையில் வைத்தனர். சிறிது நாட்களுக்கெல்லாம் நம் ஆச்சாரியாரும் சிறைசென்றார். தேவதாஸ் காந்தியும் சிறைக்கோட்டம் புகுந்தார். ஸ்ரீமதி லக்ஷ்மி மட்டும் திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்தில் நோயால் வருந்திவரும் தமக்கைக்கு ஆதரவாக இருந்து வந்தார். அப்போது அவரது மனம் எங்கிலையி லிருக்கும்?

மகாத்மா காந்தி உண்ணுவிரதம் இருந்து வந்ததன் காரணமாக, 1933 - வது வருஷம் ஜுன்மாதத்தில் விடுதலை யடைந்தார். அதன் பின்னர், ஆச்சாரியார், தேவதாஸ் காந்தி முதலியவர்களும் முறையே விடுதலையாயினர். மீண்டும் இவ்வருஷத்தில் ஹிந்தி பிரசார சம்பந்தமாய் தேவதாஸ் காந்தி தமிழ்நாட்டுக்கு விஜயஞ் செய்தபோது ஆச்சாரியாரே உடனிருந்து சுற்றுப்பிரயாணத்தை வெற்றிகரமாக நடத்தி வைத்தார். ஆகவே, இச்சமயத்தில் தேவதாஸுக்கும், லக்ஷ்மிக்கும் திருமணஞ் செய்துவிட அனைவரும் விரும்பினர்.

ஜுலைமாதம் 16-ந் தேதியன்று திருமணம் நிச்சயிக்கப் பட்டது. ஆனால் வெளியார் யாருக்கும் அழைப்பு அனுப்பவேயில்லை. பூனாவிலுள்ளவர்கள் ஒரு சிலருக்கே விஷயம் அறிவிக்கப் பட்டது. மகாத்மா தங்கி யிருந்த பர்ணகுடியிலேயே விவாகம் சிறப்பாக நடைபெற்றது. ஆயினும் மிக

மிக எளிய முறையில் நடத்தப்பெற்றது என்று இங்கு குறிப்பிடவேண்டியது அவசியம். பர்ணகுடியின் கீழண்டைத் தாழ்வாரத்தை யடுத்த திறந்த வெளியில் ஒரு சிறு பந்தல்போட்டு அதனடியில் திருமணமேடை அமைக்கப் பட்டிருந்தது. பந்தற்கால்களில் வாழை மரங்கள் கட்டியிருந்தன. மேடையின் நான்கு மூலைகளிலும் கோலம் போட்ட பானைகள் ஒன்றன்மே லொன்றாய் வைக்கப்பட்டிருந்தன. மணமக்கள் கதராடை தரித்து வந்து மேடையில் அமர்ந்திருந்தனர். பிரபல மகாராஷ்டிர பண்டிதரான பிரம்மஸ்ரீ லக்ஷ்மண சாஸ்திரியார் வேதமுறைப்படி விவாகச் சடங்கை நடத்தி வைத்தார். மணமக்கள் கதர் நூல் மாலைகளையே மாலையாக மாற்றிக் கொண்டனர். தாய் நிலையிலிருந்து - தாயினும் சாலப் பரிந்து-பாதுகாத்து வளர்த்து வந்த தம் அருமைமகளை ஆச்சாரியார் தேவதாஸின் கரத்தில் ஒப்படைத்தார். (அவர் வக்கீலாயிருக்கும் போதே ஆச்சாரியாரது மனைவியார் இறந்து விட்டார். ஆகவே மக்களை வளர்க்கும் பொறுப்பு முழுவதையும் இவரே ஏற்று நடத்த வேண்டியிருந்தது என்பதை இங்கு கவனிக்கவேண்டும்.) பின்னர் முறையே திருமாங்கல்ய தாரண முதலியவைகள் நடைபெற்றன. பஜனைகீதம் பாடிய பின்னர், எழுந்திருக்கவும் சக்தியற்ற நிலையிலிருந்த மகாத்மா காந்தியை மணமக்கள் வணங்கினர். மகாத்மா கட்டிலின்மீது சாய்ந்து கொண்டிருந்தவாறே அவர்களை ஆசிர்வதித்து, பகவத்கீதை, பஜனாவளி புத்தகங்கள், கையால் நூற்ற நூல்மாலை ஆகியவைகளைத் திருமணப் பரிசாக அளித்தார். பிறகு அவர் மணமக்களுக்கு இல்வாழ்க்கையின் மாண்பை விளக்கும் முறையில் இதோபதேசஞ் செய்தார்.

இவ் விவாகத்துக்கு வந்திருந்தவர்களில், அச்சமயம் காங்கிரஸ் தலைவராயிருந்த ஸ்ரீ ஆனே, ஸ்ரீ கேல்கார், ஸ்ரீ ஜம்னுலால் பஜாஜ், ஸ்ரீ பிர்லா, ஸ்ரீமதி சரோஜனி தேவியார், மகாகனம் ஸ்ரீநிவாச சாஸ்திரியார் குறிப்பிடத் தக்கவர்களாவர். சிறையிலிருந்த பண்டித - ஜவஹர்லால் நேரு, ஸர்தார் வல்லபாய் படேல் ஆகியவர்களும், மற்றும் பலரும் மணமக்களுக்கு வாழ்த்துச்செய்தி யனுப்பியிருந்தனர். இந்திய ஊழியர் சங்கம் முதலிய சமூக சீர்திருத்த சங்கங்கள் இவ் விவாகத்தை வெகுவாகப் பாராட்டின.

ஆனால், ஆச்சாரியாரின் இவ்வரிய செயலை இகழ்ந்தவர்களுமுண்டு. வைதீகர்களை மட்டும் நான் இங்கு குறிப்பிடவில்லை. அரசியல் விரோதிகளையே முக்கியமாகக் கூறுகிறேன். 'இது என்ன ? சீர்திருத்த திருமணம். மகாத்மா காந்தி உலகப் பிரசித்தி பெற்றவராதலால் தான் அவரது மகனுக்குத் தம் புதல்வியைக் கொடுக்க இசைந்தார். மகாத்மாவின் சம்பந்தி என்பது பெருமையும் புகழு மல்லவோ ! அவர் உண்மையிலேயே சீர்திருத்த நோக்க முடையவரா யிருப்பின், சாதாரண நிலையிலுள்ள ஒரு வாலிபனுக்குத் தம் மகளைக் கொடுப்பது தானே' என்றெல்லாம் புரளியாகப் பேசி வாதிக்கலாயினர். இவர்கள் ஆச்சாரியாரது உண்மையான மன நிலையை அறியாதவர்களென்றோ, அறிந்தும் ஏதோ குறைகூற வேண்டுமென்ற கெட்ட எண்ணமுடையவர்களென்றோ தான் அவர்களைக் கூறமுடியும். லக்ஷ்மி தேவதாஸிடம் கொண்டதுபோல், வேறொரு சாதாரண வாலிபனிடம் காதல் கொண்டிருந்தால், கட்டாயம் அவனுக்குத்தான் ஆச்சாரியார் விவாகஞ் செய்து வைத்திருப்பார். இதில் சிறிதுஞ் சந்தேகமில்லை.

ஆச்சாரியார் சேலத்தில் வக்கிலா யிருக்கும்போதே, சமீபத்தில் காலஞ்சென்ற பாரிஸ்டர் ஆதிநாராயணஞ் செட்டியாரின் குமாரனுக்கு இவரது மூத்தமகளை விவாகஞ் செய்விக்கப் போவதாக ஒரு பிரஸ்தாப மிருந்து வந்தது என்பதை யறிந்திருப்பார்களானல் இவ்விதங் குறைகூறத் துணியமாட்டார்கள். அதற்கு மட்டும் சந்தர்ப்பமிருந்தால் அக்காலத்திலேயே அவர் கலப்புமணஞ் செய்து பிறருக்கு வழிகாட்டி யிருப்பார் என்பதில் சந்தேகமுண்டோ! ஆச்சாரியார் பெரிய தியாகியாகவும், அகில இந்திய பிரசித்தி பெற்றவராகவும், பெரிய அரசியல் நிபுணராகவும் இருந்தும், இப்போது சென்னைப் பிரதம மந்திரி பதவியை வகித்துவந்தும் வைதீகப் பிராம்மணர்கள்—குறிப்பாக வைஷ்ணவ அய்யங்கார் பிராம்மணர்கள் அவரை உள்ளூற வெறுத்து வருவதற்கு முக்கிய காரணம் அவரது சமூக சீர்திருத்தப் புரட்சி செயல்களேயாகும் என்று கூறினல் அதை யாரும் மறுக்கமுடியாது.

இவ்வளவு சீர்திருத்த நோக்கமுடையவர், மகாத்மாவுக்கு முன்பே தமிழ்நாட்டில் தீண்டாமை யொழிப்பு வேலையைத் தீவிரமாகச் செய்தவராகிய ஆச்சாரியார், பிற்காலத்தில் அதாவது 1934-வது வருஷத்தில் ஸ்ரீரங்கஐயர் இந்தியா சட்டசபையில் கொண்டுவந்த ஆதித்திராவிடர்கள் ஆலயப்பிரவேச மசோதாவை ஏன் நிறைவேற வொட்டாது தடுத்தார் என்று சிலர் கேட்கிறார்கள். இக்கூற்று உண்மையல்ல; வீண் அபவாதமேயாகும். இந்தியா சட்டசபையில் ஸ்ரீரங்க ஐயரையும், சென்னை சட்டசபையில் டாக்டர் சுப்பராயனையும் ஆலயப்பிரவேச மசோதா கொண்டுவரும்படி தூண்டியவர் நமது ஆச்சாரியாரேயாவர் என்பதை அவர்கள் அறியவேண்டும். அத்தீர்மானங்களை வாசகம்

அமைத்துத் தயாரித்துக் கொடுத்தவரே ஆச்சாரியார் தான் என்று கூறப்படுகிறது. அப்படியிருக்க அவற்றிற்கு முட்டுக்கட்டை போடுவாரா என்பதைக் கவனிக்கவேண்டும்.

இந்தியா சட்டசபையில் ஆலயப்பிரவேச மசோதா சர்க்கார் மெம்பர்களின் சூழ்ச்சியால் வெகுகாலம் வரை விவாதத்துக்கு வராமலே யிருந்தது. பொதுமக்கள், மதத் தலைவர்கள், ஸ்தாபனங்களுடைய அபிப்பிராயங்களை அறிய வேண்டுமென்று காலங் கடத்தினர்கள். அப்போதும் ஆச்சாரியாரே தீவிரமாக வேலைசெய்து பொதுஜன அபிப்பிராயத்தைத் திரட்டி உருவாக்கி யனுப்பினர். சட்டசபை மெம்பர்களை யெல்லாம் ஆச்சாரியார் போய்ப் பார்த்து அம் மசோதாவுக்கு ஆதரவு அளிக்கும்படி கேட்டுக்கொண்டார். மகாத்மாவும் மெம்பர்களுக்குச் செய்தி யனுப்பினர். சர்க்கார் மெம்பர்கள் தங்கள் கட்சிக்குப் பெரும்பான்மை பலம் இருக்குஞ் சமயம் பார்த்து மேற்படி மசோதாவை விவாதத்துக்கு எடுத்துக்கொண்டு சிக்கிரத்தில் ஓட்டுக்கு விட்டனர். அதைப்பற்றி விவாதிக்க மெம்பர்களுக்கு போதிய அவகாசம் கொடுக்கவேயில்லை. சபை கலையுந் தறுவாயில் ஓட்டுக்கு விடப்பட்டது. ஹரிவிலாச சாரதா என்பார், 'இன்னும் அரைமணிநேரம் சபையை நீடிக்கச் செய்யுங்கள். ஒரு முடிவுக்கு வந்துவிடலாம்' என்று தலைவரைக் கேட்டுக்கொண்டார். அச்சமயம் தலைவராயிருந்த ஸர். ஆர். கே. சண்முகஞ் செட்டியார் அவ்வேண்டுகோளை நிராகரித்து விட்டார். கடைசியில் அம்மசோதா தோல்வியடைந்தது. ஆலயப் பிரவேச மசோதாவுக்கு இவ்வித கதி நேர்ந்ததற்கு, தன்மதிப்பியக்கத் தலைவரான ஸர். ஆர். கே. சண்முகஞ் செட்டியாரே மூலகாரணராவர். இம்முடிவை யறிந்ததும் டாக்டர் சுப்பராயனும் தன் மசோதாவுக்கும் இவ்வித

கதிதான் நேரும் என்று கண்டு அதை வாபீஸ் வாங்கிக் கொண்டார்.

விஷயம் இவ்விதமிருக்க, கூடிய சிக்கிரம் வரப்போகும் இந்தியா சட்டசபைத் தேர்தலில் காங்கிரஸுக்கு வைதீகர் பலத்தைத் தேடவேண்டி ஆச்சாரியார் ஆலயப்பிரவேச மசோதாவை அநியாயமாகக் கொன்று விட்டார் என்று அவர்மீது அரசியல் எதிரிகள் அபவாதங் கூறுவது விந்தையல்லவா! இவ்விதமே, ஸ்ரீஜத் வ. வே. சு. ஐயர் ஆரம்பித்து நடத்திய சேரமாதேவி குருகுலம் சம்பந்தமாக ஏற்பட்ட தகராறில் ஆச்சாரியார் பெயரும் சம்பந்தப்படுத்தப் பட்டு அவர்மீது குறை கூறப்படுகிறது. குருகுல வளர்ச்சி கருதி—குருகுலத்துக்குப் பொருளுதவி புரிபவர்கள் நோக்கத்தை யொட்டி பேரறிஞர் ஸ்ரீஜத் வ. வே. சு. ஐயர் மாணவர்க ளிடையே வகுப்பு வேற்றுமை பாராட்டினு ரென்றும், அது சம்பந்தமாக ஏற்பட்ட தகராறில், ஆச்சாரியார் ஸ்ரீஜத் வ. வே. சு. ஐயர் செயலை ஆதரித்தா ரென்றும், ஆகவே, அவருக்குச் சுஜாதி யபிமானம் அதிக முண்டென்றும் சிலர் கூறுகிறார்கள். இதில் எவ்வளவு தூரம் உண்மை யிருக்குமென்று என்னுல் அறிய முடியவில்லை. தமது சமூக சீர்திருத்தக் கொள்கை காரணமாக, உற்றார், உறவினர்களை யெல்லாம் துறந்தவர்—நண்பர்களது மனவருத்தத்தைத் தேடிக்கொண்டவர்—சமூகப் பகிஷ்காரத்துக்கு ஆளானவரான ஆச்சாரியாரா பிற்காலத்தில் சாதி வேற்றுமை பாராட்டுபவர்களது செயலுக்கு ஆதரவு கொடுப்பவர்? இவ்விதச் செய்திகளை எண்ணிப் பார்க்கவே, என் மனம் ஒருப்பட மாட்டே னென்கிறது.

1934-வது வருஷத்தில் மகாத்மா காந்தி ஹரிஜன இயக்கத்தைப் பரவச்செய்து நிதி திரட்டுவதற்காக, தமிழ்

நாட்டில் சுற்றுப்பிரயாணஞ் செய்தாரல்லவா! அச்சமயம் ஆச்சாரியார் மூன்ருவது முறையாகச் சிறை சென்று கோவை ஜெயிலில் இருந்தார். மகாத்மா, டாக்டர் ராஜனுடன் 6-ந்தேதி திருப்பூருக்கு விஜயஞ் செய்தார். அதே நாளில் ஆச்சாரியார் சிறையிலிருந்து விடுதலை யடைந்தார். அவர் சிறைவாசக் கஷ்டத்துக்குச் சிரமபரிகாரஞ் செய்து கொள்ளவேண்டி யிருக்க, அவ்விதஞ் செய்யாது, நேராகத் திருப்பூரில் நடைபெறுங் கூட்டத்துக்கு ஸ்ரீ. ஈ. வே. ராமசாமி நாயக்கர் மோட்டாரில் வந்து சேர்ந்து கலந்துகொண்டார். பிறகு, அங்கிருந்து மகாத்மா கோஷ்டியுடனேயே ஸ்ரீரங்கம் முதலிய பல இடங்களுக்குஞ் சென்று ஹரிஜன இயக்கத்துக்குப் பேராதரவும், நிதியுஞ் சேர்த்துக்கொடுத்தார். 10-ந்தேதி தமது திருச்செங்கோடு ஆசிரமத்தில் மகாத்மா கோஷ்டியாரை வரவழைத்து உபசாரஞ் செய்தார். வடநாடு செல்லும்வரை அவர் மகாத்மாவுடனேயே எல்லா இடங்களுக்குஞ் சென்று தீவிரமாக வேலை செய்யலானர். தமக்கு ஜீவக்கொள்கையாகவுள்ள தீண்டாமையொழிப்பு, சமூக சீர்திருத்தம் ஆகியவைகளுக்கு எச்சமயத்திலும் சேவை செய்யவும், அவற்றிற்காக எவ்விதத் தியாகஞ்செய்யவும் தயாராக இருக்கும் ஆச்சாரியரிடமும் துவேஷத்தினலோ அரசியல் விரோதங் காரணமாகவோ குற்றங் கற்பிக்க முயல்வது தகுமா? முறையா? தருமந்தானு? என்று நான் அவர்களை நோக்கிக் கேட்க விரும்புகிறேன்.

---

## பதின்மூன்றாவது இயல்

### சட்டசபை வேலையில் சிரத்தை.

நம் ஆச்சாரியாரும் சட்டசபை வேலைகளில் சிரத்தை காட்டி ஈடுபட்டார் என்ற செய்தி பலருக்கும் ஆச்சரியத்தை விளைவிக்கும். சுமார் பதினைந்து வருஷங்களுக்கு முன் தேசபந்து சித்தரஞ்சன தாஸருடன் சட்டசபைப் பிரவேசங் கூடாதென்று தீவிரமாகப் போராடிய நம் ஆச்சாரியார் - தேசபந்து தாஸ், பண்டித மோதிலால் நேரு, ஸ்ரீ வித்தல் பாய் படேல் முதலிய தலைவர்கள் சேர்ந்து தோற்றுவித்த சுயராஜ்யக் கட்சியால் தேசமக்களுக்குப் பலனொன்றும் உண்டாகாதென்று எடுத்துக்காட்டி நிரூபித்த ஆச்சாரியார், 1934 - வது வருஷம் செப்டம்பர்மாதம் முதலிலிருந்து சட்டசபைப் பிரவேசத்தை ஆதரித்துத் தேர்தல் பிரசாரத்தைச் செய்யத் தொடங்கி விட்டாரென்றால் அது அனைவருக்கும் ஆச்சரியத்தை விளைவிக்கத்தான் செய்யும்.

காலதேச வர்த்தமானத்தை யநுசரித்து காரியஞ்செய்வதில் நம் ஆச்சாரியார் சிறந்த நிபுணர். தேசபந்து தாஸர் தேச நலத்தை முன்னிட்டே சட்டசபைப் பிரவேசஞ் செய்ய விரும்பினாரெனினும், அவர் சுயராஜ்யக் கட்சியை ஆரம்பித்த சமயம் அரசியல் நிலைமையும், பொது மக்கள் மனோபாவமும் அவரது நன்னோக்கத்தை நிறைவேற்றுவதற்குத் தகுந்த பக்குவம் வாய்ந்தனவாக இல்லை. அதனாலேயே சுயராஜ்யக் கட்சியின் தீவிரவேலை எதிர்பார்த்த பலனையடையாது தோல்வியுற்றது. இந்நிலைமையைத் தீர்க்க தரிசனமாக அறிந்தே ஆச்சாரியார் தேசபந்து தாஸர் முதலியவர்களின் முயற்சியை எதிர்த்தார்.

நம் ஆச்சாரியார் சட்டசபை வேலையில் புகுந்திருக்கும் இச்சமயமோ தகுந்த கருணமாகும். 1924-வது வருஷத்து அரசியல் நிலைமையையும் 1934-வது வருஷத்து அரசியல் நிலைமையையும் சிர் தூக்கிப் பார்ப்பவர்களுக்கு இந்திய அரசிலியல் ஏற்பட்டிருக்கும் அபிவிருத்தியும் முற்போக்கும் நன்கு விளங்கும். பிரிட்டிஷ் சர்க்கார் இந்தியாவுக்கு 'மாகாண சுயாட்சி' வழங்க முன் வந்திருக்குங் காலம். 'மாகாண சுயாட்சி' என்ற சொல்லுக் குரியவாறு இந்திய மக்களுக்கு அரசியல் சுதந்திரங் கொடுக்கா விடினும், அதை நமது கட்டுப்பாடான முயற்சியால் பெற்று விடலாம் என்ற நம்பிக்கை இருந்து வருகிறது. இத்தகைய நல்ல சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்வதில் பழுதொன்று மில்லை. அடுத்தடுத்து ஏற்பட்ட அரசியல் போராட்டங்களால் அலுத்துப் போயிருக்கும் பொதுமக்களுக்குக் களைப்பாற அவகாசங்கொடுத்து-பூரண சுதந்திர லட்சியத்தைப் பெறுவதற்கு நடைபெற விருக்கும் பெரும்போராட்டத்துக்குத் தங்களைத் தயாராக்கிக் கொள்வதற்குப் போதிய அவகாசங் கொடுத்து - இதனிடையே பிரிட்டிஷ் - இந்திய சர்க்கார் வாயிலாகக் கிடைக்கும் அரசியல் உரிமைகளைக் கொண்டு அப் பொதுமக்களுக்கு எவ்வளவு தூரம் நன்மை செய்ய முடியுமோ அவ்வளவும் செய்யலாம் என்ற உயரிய நோக்கோடேயே நம் ஆச்சாரியார் காலமறிந்து இச் சட்டசபை வேலையில் பிரவேசித்துத் தீவிரமாக வேலை செய்யலானுர்.

டாக்டர் அன்சாரி, பண்டித மாளவியா, டாக்டர் விதன சந்திர ராய், ஸ்ரீஜத் சத்திய மூர்த்தி முதலிய தலைவர்கள் சேர்ந்து பழைய சுயராஜ்ய கட்சியை உயிர்ப்பித்து, மகாத்மாவினுடைய ஆசியும், காங்கிரஸ் மகாசபையி னுடைய ஆதரவும் பெற்று சட்டசபை வேலை செய்யலாம் என்று

செய்த முயற்சியை, நம் ஆச்சாரியார் காங்கிரஸ் மகா சபையே நேரிடையாகச் சட்டசபை வேலையில் ஈடுபடுவது தேச நலத்துக்கு மிகவும் உகந்தது என்று உட்கொண்டு அவ்வழியில் திருப்பினர். தீவிர வாதியான பண்டித ஜவஹர்லால் நேருவும் காங்கிரஸ் அபேதவாதிகளும் காங்கிரஸ் சட்டசபைப் பிரவேசஞ் செய்யக்கூடாதென்று தீவிரமாக எதிர்த்தும், நம் ஆச்சாரியார் ஸ்ரீஜத் சத்தியமூர்த்தியோடு சேர்ந்து அவர்களுக்கெல்லாம் தகுந்த பதிலளித்து முடிவில் சட்டசபைப் பிரவேசத்தைக் காங்கிரஸ் மகா சபை மேற் கொள்ளும்படி செய்துவிட்டார்.

சட்டசபைப் பிரவேசமே காங்கிரஸ் மகாசபையின் முக்கிய வேலைத்திட்டமான பிறகு, நம் ஆச்சாரியார் யதேச்சாதிகாரங் கொண்ட பிரிட்டிஷ் இந்திய சர்க்காருக்கும் பிற்போக்காளர்களான பிற கட்சியினருக்கும் பதிலளிக்கும் முறையில் தேர்தல் தந்திரங்களை நியாயமான வழியில் கடைப்பிடித்து இந்தியா சட்டசபை, சென்னை ஜனப்பிரதிநிதிசபை, அரசாங்க சபை, சென்னை நகரசபை, வெளியூர் முனிசிபாலிடி, ஜில்லா போர்டுகள் ஆகிய ஸ்தாபனங்களில் காங்கிரஸ் காரர்களுக்கே வெற்றியை வாங்கிக் கொடுத்து செய்த அபார வேலை ஆச்சாரியாரின் சரித்திரத்திலேயே பொன்னெழுத்துக்களால் பொறித்து வைக்கக்கூடிய குறிப்பிடத்தக்க சம்பவமாகும். சட்டசபைப் பகிஷ்கார வேலையில் எவ்வளவு தீவிர உணர்ச்சி காட்டினரோ, அதேபோல் சட்டசபைப்பிரவேச வேலையிலும் அதிதீவிர உணர்ச்சி காட்டிச் சேவை செய்யலானர்.

1934-வது வருடம் கூடிய தமிழ் மாகாண காங்கிரஸ் மகாநாட்டில் நம் ஆச்சாரியார் மீண்டும் தமிழ் மாகாண காங்கிரஸ் கமிட்டிக்குத் தலைவராக ஏகமனதாகத் தேர்ந்

தெடுக்கப் பட்டார். எனவே, காங்கிரஸ் மகாசபையின் கட்டளைப்படி இந்தியா சட்டசபைத் தேர்தலுக்குத் தமிழ் நாட்டில் தகுந்த அபேட்சகர்களைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பும், அத்தேர்தலில் காங்கிரஸுக்கே பெருவெற்றி யேற்படும்படி செய்யும் பொறுப்பும் ஆச்சாரியாருக்கே ஏற்பட்டது என்று கூறாமலே வாசகர்கள் அறிந்து கொள்வார்கள்.

ஆச்சாரியார் தகுந்த அபேட்சகர்களைத் தேர்ந்தெடுக்கும் விஷயத்தில் மிகவுஞ் சிரத்தை காட்டலானார். தம் சொந்த அபிப்பிராய பேதங்காரணமாக காங்கிரஸிலிருந்து விலகியிருக்கும் டாக்டர் பி. வரதராஜலு நாயுடு இத்தேர்தலில் ஒரு அபேட்சகராக நிற்க விரும்புவதாக அறிந்ததும், ஆச்சாரியார் அவரிடம் தாமே நேரில் சென்று, மீண்டும் காங்கிரஸில் சேர்ந்து விட்டால், அவரை வடாற்காடு, கோவை, சேலம் ஆகிய தொகுதிகளுக்குக் காங்கிரஸ் அபேட்சகராகப் போட்டு விடுவதாகக் கூறினார். டாக்டர் நாயுடு காங்கிரஸ் பலத்தைக் காட்டிலும் தம் சொந்த பலத்தில் அதிக நம்பிக்கை கொண்டிருந்ததால், தாம் காங்கிரஸில் சேர முடியாதென்றும், தம்மைப்போட்டியின்றி விட்டு விடவேண்டுமென்றும் பிடிவாதமாகக் கூறினார். ஆச்சாரியார் பழைய தோழமையைக் கருதி டாக்டருக்கு எவ்வளவோ தூரஞ் சொல்லிப் பார்த்தார். டாக்டர் நாயுடு திருப்பூரில் 'பிரபஞ்சமித்திரன்' என்னும் வாரப்பத்திரிகையை நடத்திக் கொண்டிருந்த காலத்தில், அவரது தீவிர உணர்ச்சியைக் கண்டு நம் ஆச்சாரியாரே அவரைச் சேலத்துக்கு வரவழைத்துக் காங்கிரஸில் சேர்த்துத் தேசசேவையில் ஈடுபடச்செய்தார் என்றுங் கூறப்படுகிறது. இதுவன்றி டாக்டர் நாயுடுமீது மதுரையில் நடைபெற்ற ராஜத்துவேஜ வழக்

குக்கு நிதி திரட்டி உதவியதோடு ஆச்சாரியார் தாமே வக்கீலாகவுந் தோன்றி அவர் சார்பில் வாதித்து விடுதலை பெறுமாறு செய்திருக்கிறார். இதுபோன்ற இன்னும் பல உதவிகளைச்செய்தும், டாக்டர் நன்றி பாராட்டுவதற்குப் பதிலாக ஆச்சாரியாரோடு மாறுபட்டுச் சமயம்நேர்ந்தபோதெல்லாம் அவரைத் "தமிழ்நாடு" பத்திரிகையில் தாக்கி யெழுதி யிருக்கிறார்; பலவிதமாகக்குறை கூறியிருக்கிறார். இவ்விதமிருந்தும் ஆச்சாரியார் அதையெல்லாம் பொருட்படுத்தாது, இந்தியா சட்ட சபையில் அவருக்கும் ஒரு ஸ்தானத்தைக் கொடுத்துக் கௌரவிக்க விரும்பித் தாமே அவரிடஞ் சென்று கேட்டாரென்றால் அவரது பெருந்தன்மையான குணத்தை யென்னென்பது !

டாக்டர் நாயுடு தம் பிடிவாதத்தை விடாது போகவே, ஆச்சாரியார் அவருக்குப் புத்தி கற்பிக்க விரும்பினர். டாக்டர் நாயுடுவைப் போன்றே, ஸர். ஆர். கே. சண்முகஞ் செட்டியாரும் தம்மிடுக்கைக் காட்டலானர். முதலில் காங்கிரஸில் சேர்ந்து சுயராஜ்யக் கட்சி காலத்தில் இந்தியா சட்ட சபையில் ஸ்தானம் பெற்று பண்டித மோதிலால் நேரு போன்ற தலைவர்கள் தயவால் பெரிய மனிதரான ஸர். ஆர். கே. சண்முகஞ் செட்டியார், சுயராஜ்யக் கட்சியினர் சட்ட சபை ஸ்தானங்களை ராஜிநாமா செய்துவிட்டு வெளியேறிய காலத்து, இவர் தம் ஸ்தானத்தை ராஜிநாமா செய்யாது, சர்க்கார்க்குநல்ல பிள்ளையாய், அவர்கள் உதவியால் விட்டல் பாய் படேலுக்குப்பிறகு இந்தியா சட்ட சபைக்குத் தலைவராய்ச் சிலமாதங்கள் இருந்து விட்டுவந்தார். சட்டசபைத் தலைவராயிருப்பவர்களைப் போட்டியின்றியே விட்டுவிடுவது வழக்கமாதலால், தமக்குங் காங்கிரஸ் யாரையும் போட்டியாகப் போடக்கூடாதென்று பெருமிதத்தோடு கூறினர். காங்கிரஸ்

தமக்குப் போட்டியாக அபேட்சகரைப் போடப்போவதாக அறிந்ததும், அவர் வெகுண்டு எழுந்து, காங்கிரஸ் மெம்பர்கள் ஒழுங்காக நடக்கிறார்களா என்று பார்ப்பதற்காகத் தாம் கட்டாயம் இத் தேர்தலில் வெற்றிபெற்று மீண்டும் தலைவராகவே வரப்போவதாகவும், சென்ற தேர்தலில் ஒரு தொகுதியில் நின்று வெற்றிபெற்ற தாம், இந்த தேர்தலில் சென்னையிலுள்ள எல்லா ஜில்லாக்களுஞ் சேர்ந்த வியாபாரத் தொகுதியில் நின்று பெருவெற்றி பெறப்போவதாகவும் எல்லாம் வீராப்புப்பேச்சு பேசினார்.

இதுவரை அரசியல்கொள்கை காரணமாக ஆச்சாரியாரோடு மாறுபட்ட அபிப்பிராயங் கொண்ட மிதவாதக் கட்சியினரும், ஜஸ்டீஸ் கட்சியினரும், தாங்கள் ஏகபோகமாக அநுபவித்துவரும் சட்டசபை பதவி முதலியவைகளுக்குக் காங்கிரஸ் காரர்களை அபேட்சகர்களாக நிறுத்தித் தேர்தல் பிரசாரஞ் செய்ய வந்து விட்டாரென்று அறிந்ததும் அவர்கள் மனங்கலங்கினர். இத்தேர்தலில் தங்கள் பணம், பட்டம், செல்வாக்கு எல்லாம் பறிமுதல் போய் விடுமென்று ஊகித்துக்கொண்ட அவர்கள் ஆச்சாரியாரைப் பலவிதமாகத் தாக்கினர். "ஜஸ்டீஸ்" கட்சிப் பத்திரிகைகள் எல்லாம் ஆச்சாரியாரைப்பற்றிக் கேவலமாக எழுதித் துஷ்பிரசாரஞ் செய்தன. ஆச்சாரியார் சென்னை நகரம் முதலிய தொகுதிகளுக்கு முறையே ஸ்ரீமான்கள் எஸ். சத்தியமூர்த்தி, முத்துரங்க முதலியார், டாக்டர் இராஜன், பி.எஸ். குமாரசாமி ராஜா, டி. எஸ். அவிநாசிலிங்கம் ஆகியவர்களை அபேட்சகர்களாக நிறுத்தினார். மற்றெல்லா தொகுதிகளைவிட, டாக்டர் நாயுடு, ஸர். ஆர். கே. சண்முகஞ் செட்டியார் ஆகியோர் நின்ற வடாற்காடு தொகுதி, வியாபாரத் தொகுதிகளில் தான் ஆச்சாரியார் தீவிரப் பிரசாரஞ் செய்தார்.

அவரது பிரசார வேகத்தையுஞ் சக்தியையும் கண்டு எதிரிகள் நடுங்கினர். ஆரம்பத்தில் வீராப்பு பேசிய ஸர். சண்முகமும் உள்ளூறப் பயங் கொள்ளலானுர். அவர் தலைவர் பதவி காலம் முடியு முன்பே தேர்தல் பிரசங்கஞ் செய்யத் தொடங்கி விட்டார். அவர்செய்த பிரசங்கங்களில் சென்னை விக்டோரியா பப்ளிக் ஹாலிலும் திருவல்லிக்கேணி கடற்கரையிலும் செய்த பிரசங்கங்கள் குறிப்பிடத் தக்கவையாகும். அவர் தம் பிரசங்கங்களில் ஆச்சாரியாரை எவ்வளவுதூரம் தாக்கிப் பேச முடியுமோ அவ்வளவு தூரம் தீவிரமாகத் தாக்கிப் பேசினுர். ஆச்சாரியாருக்குக் "குல்லூக பட்டர்" என்று பட்டஞ் சூட்டினுர். முற்காலத்தில் மநு தர்ம சாஸ்திரத்துக்குக் குல்லூக பட்டர் என்பவர் வியாக்கியானம் செய்துவிட்டுப் போனதுபோல், மகாத்மாவும் காங்கிரஸும் செய்துவரும் வேலைகளுக்கு நம் ஆச்சாரியாரும் புது புது தத்துவங்களை யெல்லாங் கற்பித்து வியாக்கியானஞ் செய்து மகிமை யுண்டு பண்ணி வருவதாகப் பொருள் படுத்தி அவர் அவ்விதங் கூறினுர்.

இதுவன்றி, ஒருசில வைதீக சநாதனத் தலைவர்கள், ஆச்சாரியார் கடவுள் நம்பிக்கை யற்றவரென்றும், வைதீக ஆசாரங்களி னின்றும் வழுவினவரென்றும் அதனுல் அவர் சேர்ந்திருக்குங் காங்கிரஸும் கடவுள், மதம் ஆகிய விஷயங்களில் தக்க பாதுகாப்பளிக்காதென்றும் எல்லாம் பொய்ப் பிரசாரஞ்செய்து மக்கள் மனதைக் கலைக்க முயன்றனர்.

ஆச்சாரியார் ஒரு நாஸ்திகர் என்றும், உண்மையில் அவருக்குக் கடவுள் நம்பிக்கை கிடையாதென்றுஞ் சிலர் கூறுவது உண்மையா? அவர் தினசரி காயத்ரி ஜெபம் செய்து கொண்டிருந்தார் என்பது, முதன் முதலாக

வேலூரில் சிறைப்பட்டபோது, சிறையில் ஜெபஞ்செய்வதற்குந் தக்க வசதியில்லை என்று தமது 'சிறைவாச அநுபவத்'தில் குறித்தெழுதி யிருக்கிறார். அவரது உபாசனமூர்த்தி ஆஞ்சநேயர் என்பது 'கண்ணன் காட்டிய வழி' என்னும் நூலின் ஆரம்பத்தில் கூறிய துதியால் அறியலாம். அது வன்றி, அவர் தேர்தல் விளம்பரங்களிலெல்லாம் அநுமார் உருவத்தை அச்சிடும்படி செய்திருப்பதிலிருந்தே அவருக்கு அநுமாரிடத்திலுள்ள பக்தியை நன்கு அறிந்து கொள்ளலாம். பகவத்கீதை, உபநிஷத ஆராய்ச்சிகளெல்லாம் அவருக்குள்ள சமயப்பற்றை நன்கு விளக்குவதற்குப் போதிய சான்றுகளாகும்.

ஆச்சாரியாரை மகாத்மா காந்தி உள்ளிட்ட தலைவர்களெல்லாம் "இராஜாஜீ" என்று செல்வப் பெயராலேயே அழைத்து வருகிறார்கள். நாளடைவில், தமிழ் நாட்டிலும் இப்பெயர்தான் பிரபலமடைந்து விட்டது. ஆச்சாரியார் மற்றெல்லாத் தலைவர்களைக் காட்டிலும் மகாத்மா காந்தியைப் பின்பற்றி யொழுகுவதாலும், அவரது குணஞ்செயல்களைப் பெரிதுங் கொண்டிருப்பதாலும் தமிழ் நாட்டார் அவரைத் "தென்னாட்டுக் காந்தி" என்று வழங்குகிறார்கள்.

இவ்விதம், ஜஸ்டிஸ் கட்சிக்காரர்களும் சநாதனிகளும், பொய்ப் பிரசாரஞ் செய்தும், ஆச்சாரியாரும், ஆந்திர, கேரள காங்கிரஸ் தலைவர்களும் எடுத்துக்கொண்ட முயற்சியின் பயனாக, சென்னை மாகாணமே எல்லா ஸ்தானங்களிலும் வெற்றி பெற்று; மற்ற மாகாணங்களுக்கும் வழி காட்டியது.

இந்தியா சட்டசபைத் தேர்தலை யடுத்து, சென்னைச் சட்டசபையில் ஏற்பட்ட உப தேர்தல்களிலும் காங்கிரஸ் அபேட்சகர்களை நிறுத்தி வெற்றி பெறச்செய்த பெருமை

நம் ஆச்சாரியாருக்கே உரியதாகும். இதிலிருந்து, நம் ஆச்சாரியார் ஒத்துழையாமை, சட்ட மறுப்புப் போராட்டங்களை நடத்துவதில் மட்டுமல்ல; கதர், மதுவிலக்கு; தீண்டாமை யொழிப்பு முதலிய நிர்மாண வேலைத்திட்டங்களை நிறைவேற்றி வைப்பதில் மட்டுமல்ல; சட்டசபைத் தேர்தல் போராட்டங்களைத் திறம்பட நடத்துவதிலும் பேராற்றல் வாய்ந்தவர் என்று நன்கு தெரிகிற தல்லவா !

இங்ஙனம் சட்டசபைத் தேர்தல்களில் காங்கிரஸுக்குப் பெரு வெற்றியை வாங்கித்தந்த நம் ஆச்சாரியார் ஸ்ரீமதி ருக்மணி லட்சுமீபதியைப் பாராட்ட சென்னை ஹைகோர்ட்டுக் கடற்கரையில் நடந்த மாபெருங் கூட்டத்தில், 'நான் பொது வாழ்வில் ஈடுபட்டு 30 - வருஷங்கள் ஆயின. மற்றவர்கள் வேலை செய்வதற்கு இடங்கொடுக்க நான் விலகிக் கொள்கிறேன்' என்று தாம் காங்கிரஸிலிருந்து விலகி ஓய்வு எடுத்துக்கொள்ளப் போவதாக மெள்ள பேச்சோடு பேச்சாய்க் கூறிவிட்டார்.

இவ் விஷயத்தை முதலில் யாரும் அவ்வளவாகக் கவனிக்க வில்லை. நாளடைவில் தான், ஆச்சாரியார் அரசியலிலிருந்து விலகி ஓய்வெடுத்துக் கொள்ளப்போவது உறுதி என அனைவர்க்குந் தெரிந்தது. ஆச்சாரியார் 1935 - வது வருஷம் மேமாதம் 12-ந் தேதி யன்று தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவர் பதவியையும் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினர் பதவியையும் ராஜிநாமா செய்து மேற்படி கமிட்டிகளுக்கு முறையே தமது ராஜிநாமா கடிதங்களை அனுப்பி விட்டார். அதன் பிறகு தான் தமிழ் நாட்டில் பரபரப்புண்டாயிற்று. வடநாட்டுத் தலைவர்களுக்கும் இவ்விஷயம் வருத்தத்தை யுண்டு பண்ணியது. ராஜன் பாபு, வல்லபாய் படேல், பண்டித நேரு முதலியோர் ஆச்

சாரியாரின் ராஜிநாமாவை வாபீஸ் வாங்கிக்கொள்ளும்படி வேண்டிக் கொண்டனர். மகாத்மா கூட ஆச்சாரியார் விலகுவதை ஒப்புக்கொள்ளவில்லை. தமிழ் நாட்டுக் காங்கிரஸ் கமிட்டியாரும், "நீங்கள் வேண்டுமானல் ஓய் வெடுத்துக் கொள்ளுங்கள்; ஆனல், தலைவர் பதவியை ராஜிநாமா செய்ய வேண்டாம்" என்று வெகு தூரம் வேண்டிக்கொண்டனர். ஆச்சாரியார் சட்டசபைப் பிரவேச காலத்தில் பலவித தொந்தரவுகளும், குழப்பங்களும் ஏற்படும் என்பதை உத்தேசித்தோ என்னவோ இவ்விஷயத்தில் பிடிவாதமாகவே இருந்து விட்டார்.

அடுத்து, செங்கற்பட்டில் நடைபெற்ற 46-வது தமிழ் மாகாண மகாநாட்டில் ஆச்சாரியார் ராஜீநாமா விஷயம்வெகுவாக விவாதிக்கப் பட்டது. அங்கும் பலர் ஆச்சாரியாரை 'முக்கியமான இச் சமயத்தில் தாங்கள் அரசியலிலிருந்து விலகிக்கொள்வது சரியா ?' என்று கேட்டுக்கொண்டனர். அப்போது ஆச்சாரியார், "தனி மனிதர்கள் வருவார்கள்; போவார்கள். ஆனல் காங்கிரஸ் எப்போதும் நிலைத்து நிற்கும். மக்களின் தேசிய உணர்ச்சியும் சுதந்தர தாகமுந் தான் காங்கிரஸ் ஸ்தாபனத்தின் ஜீவசக்தி. ஆகையால் தனி மனிதர்களைப்பற்றி நீங்கள் கவலைப்படக் கூடாது" என்று உருக்கமாக அளித்த பதில் யாரையும் அதற்கு மேல் பேச வொட்டாது செய்துவிட்டது.

------

## பதினன்காவது இயல்.

### ஆச்சாரியாரும் சத்தியமூர்த்தியும்.

பின்னர், ஆச்சாரியார் விருப்பப்படி ஸ்ரீஜத் சத்தியமூர்த்தி தமிழ் மாகாண காங்கிரஸ் கமிட்டித் தலைவராகத்

தேர்ந்தெடுக்கப் பட்டார். ஒருசிலர் ஸ்ரீஜத் எஸ். ஸ்ரீநிவாஸ ஐயங்காரைக் கொண்டுவர முயன்றனர். ஆனால், பலிக்க வில்லை. ஆச்சாரியார் தமக்குப் பதிலாக ஸ்ரீஜத் சத்திய மூர்த்தியைத் தலைவர் பதவியில் நியமித்ததன் பலனை 1935-36-ஆகிய இரு வருஷங்களிலும் தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டி செய்த வேலைகளால் அறிந்தோம். ஸ்ரீஜத் சத்திய மூர்த்தி முதல் வருஷத்தில் செய்த அரிய சேவையைக் கண்டே, காரைக்குடியில் கூடிய 47-வது தமிழ் மாகாண மகா நாட்டில் பதவி மோகங் காரணமாகப் பலத்த போட்டி யிருந்தும். ஆச்சாரியார் அவரை மற்றொரு வருஷமும் தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டிக்குத் தலைவராக வரும்படிச் செய் தார்; அதற்கேற்ப, மாகாணக் காங்கிரஸ் பிரதிநிதிகள் பெரும்பாலாரும் ஆதரித்தனர். ஸ்ரீஜத் சத்திய மூர்த்தியின் தலைமையில் தமிழ்நாடு காங்கிரஸ் முன்னெப்போதையும் விட பெருஞ்சிறப் படைந்ததே யொழிய, எவ்வகையிலுந் தாழ்ச்சியுறவில்லை என்பதை அனைவரும் ஒப்புக்கொண்டே யாகவேண்டும். போட்டியும், பொறாமையும், பிளவும் ஏற் படக்கூடிய சட்டசபை முதலியவைகளின் தேர்தல் காலங் களில் காங்கிரஸ் போன்ற ஒரு அரசியல் ஸ்தாபனத்தைத் தலைமைவகித்து நடத்துவதென்பது சாமானிய காரியமன்று. இந்திய அரசியல் சீர்திருத்தச் சட்டத்தின்படி ஏற்பட்ட பொதுத் தேர்தலில் - அதாவது மாகாண சட்ட சபைத் தேர்தலில் தமிழ் நாட்டுக்கு நிகரற்ற வெற்றியை வாங்கித் தந்த பெருமை ஸ்ரீஜத் சத்திய மூர்த்தியையே சாரும். அவரது சலியா உழைப்பும், சிறந்த பிரசங்கமுமே இன்று சென்னை ஜனப்பிரதிநிதி சபையிலும், அரசாங்க சபை யிலும் காங்கிரஸ் காரர்கள் பெரும்பான்மையோராக வீற் றிருப்பதற்கும், காங்கிரஸ் மந்திரிசபை ஆட்சி நடத்தி வரு வதற்கும் மூலகாரண மென்பதை எவரே மறுக்க வல்லார்?

தமிழ் நாட்டைப் பொறுத்த வரையில், காங்கிரஸில் பிரதான புருஷர்களாய் இருந்துவந்த தலைவர்களில் பெரும் பாலார் நம் ஆச்சாரியாரோடு ஏதோ ஒருவகையில் மாறு பட்ட அபிப்பிராய முடையவர்களாகவே இருந்து வந்திருக் கின்றனர். அவ்வபிப்பிராய பேதங்காரணமாகவே அவர்கள் ஆச்சாரியாரோடு காங்கிரஸ் வேலைகளிலும் அரசியலிலும் ஒத்துழைக்க முன் வருவதில்லை. அவ்விதத் தலைவர்களில் குறிப்பிடத் தக்கவர்கள் ஸ்ரீஜத் எஸ். ஸ்ரீநிவாஸ ஐயங் கார், காலஞ்சென்ற ஸ்ரீஜத் ஏ. அரங்கசாமி ஐயங்கார் ஆகி யோராவர். ஆனால் ஸ்ரீஜத் சத்திய மூர்த்தியோ நம் ஆச் சாரியாருக்கு அவர் அரசியலில் பிரவேசித்ததி லிருந்து அருமைத் தோழராயிருந்து வருகிறார். ஆச்சாரியார் சமயம் நேர்ந்தபோ தெல்லாம் ஸ்ரீஜத் சத்திய மூர்த்தியின் ஒத் துழைப்பை நாடியிருக்கிறார். அவரது ஒத்துழைப்பின் மீது ஆச்சாரியார் பல அரிய காரியங்களைச் செய்திருக்கிறார். ஆச்சாரியாருக்கும் ஸ்ரீஜத் சத்திய மூர்த்திக்குங்கூட சில விஷயங்களில் மிகுந்த அபிப்பிராய பேதமுண்டு. ஆயினும், அதற்காகப் பொதுவேலைகளில் ஒன்றுபட்டு வேலை செய்யத் தயங்குவதில்லை. 1934-வது வருஷத்துக்கு முன்வரை ஆச் சாரியாரும், ஸ்ரீஜத் சத்தியமூர்த்தியும் சட்டசபை வேலை சம் பந்தமாக ஓரே மேடையிலிருந்து ஐக்கிய மனோபாவத்தோடு பேசியதில்லையே யொழிய, மற்ற காரியங்களிலெல்லாம் அவர் கள் சேர்ந்தே சேவை செய்து வந்திருக்கின்றனர். இன்று தமிழ்நாடு காங்கிரஸ் மற்ற மாகாண காங்கிரஸ் ஸ்தாபனங்க ளோடு சரி சமத்துவமாகத் தலைநிமிர்ந்து நிற்கிற தென்றால், அதற்கு முக்கிய காரணம் ஸ்ரீஜத் இராஜகோபாலாச்சாரி யார், ஸ்ரீஜத் சத்திய மூர்த்தி ஆகிய இருபெருந் தலைவர் களின் பேருழைப்பேயாகும் என்றால் மிகையாகாது. அகில

இந்திய காங்கிரஸ் கமிட்டியிலும், காரியக் கமிட்டியிலும் தமிழ்நாடு காங்கிரஸின் சார்பாகப் பேசக்கூடிய தகுதியில் இருப்பவர்கள் இவ் விருபெரியார்களே யல்லவா! இவ்விரு பேரறிஞர்களும்கூட இல்லையென்றால், வட நாட்டார் தமிழ் நாட்டானை ஒரு பொருட்டாகவே மதிக்க மாட்டார்கள் என்பது திண்ணம்.

மாகாண சட்டசபைத் தேர்தலில் தாம் நின்ற சென்னைச் சர்வகலாசாலைத் தொகுதியை ஸ்ரீஜத் சத்திய மூர்த்தி நம் ஆச்சாரியாருக்கு விட்டுக் கொடுத்து விலகிக் கொண்டாரென்றால், இவ்விருபெருந் தலைவர்களது இணை பிரியா தோழமைக்கும், பேரன்புக்கும், மனவொற்றுமைக்கும் இதைவிட உதாரணம் வேறென்ன கூறமுடியும்? சர்வகலா சாலைத்தொகுதியில் நின்று வெற்றிபெறுவது வாயிலாகப்பிற் காலத்தில் சென்னை மாகாண அரசியலில் ஏற்படப்போகும் தகுதியையும் பெருமையையும் தம்மால் மதிக்கப்படும் ஒரு நண்பருக்காக ஸ்ரீஜத் சத்திய மூர்த்தியைத் தவிர வேறு யாரும் விட்டுக்கொடுக்க விரும்பவே மாட்டார்கள் என்பது திண்ணம். இந்நிலையைச் செயற்கரிய செயலென்றும், அரிய பெரிய தியாகமென்றுங் கூறினல் உயர்வு நவிற்சியாகாது. சட்டசபை பிரவேசத்துக்குப் பேராதரவு கொடுத்து வேலை செய்து வந்தாலும், தாமே தேர்தலுக்கு நின்று எவ்வித ஸ்தானமும் பெற விரும்பாத நம் ஆச்சாரியாரை, ஸ்ரீஜத் சத்திய மூர்த்தி, தமது சர்வகலாசாலைத் தொகுதியை விட்டுக் கொடுத்து நிற்க வைத்து எளிதாக வெற்றியையும் வாங்கிக் கொடுத்ததனல் தான், இன்று நம் ஆச்சாரியார் பிரதம மந்திரியாக, மற்ற மாகாணங்களும் அதிசயிக்கத் தக்க வகையில் நம் மாகாண அரசியலைத் திறம்பட நடத்தி வருகிறார். தம் அதிகாரத்தை உபயோகப்படுத்தி நமக்கும்

பலவித நன்மைகளைச்செய்து வருகிறார். ஆகவே, இந்நிலையை யுண்டு பண்ணிய ஸ்ரீஜத் சத்திய மூர்த்திக்கு நாம் அனைவரும் நன்றி பாராட்டக் கடமைப்பட் டிருக்கிறோம்.

மகாத்மா காந்தி காங்கிரஸிலிருந்து விலகியிருந்தாலும் சமயம் நேரும்போது எங்கிருப்பினும் தாமே வந்து கலந்து கொள்வதாகக் கூறியதுபோல், அவ்விதமே பல முக்கிய சமயங்களிலும், காங்கிரஸ் தலைவர்கள் வேண்டுகோளின்படி தமது அரிய ஆலோசனைகளைக் கூறியுதவுவதுபோல், நமது ஆச்சாரியாரும் அரசியலிலிருந்து விலகியிருந்த காலத்தும், காங்கிரஸ் வேலைகள் ஒழுங்காக நடைபெறுவதற்கு வேண்டிய ஆலோசனைகளைக் கூறியே வந்திருக்கிறார். பொதுத் தேர்தல் நெருங்கியதும், ஆச்சாரியார் மீண்டும் வந்து கலந்து கொண்டு காங்கிரஸ் வெற்றிக்காகப் பாடுபடலானார்.

இதனிடையே திருச்சி ஜில்லா தலைவர் தேர்தலில் ஒரு அசம்பாவிதம் நேர்ந்தது. அதில் டாக்டர் ராஜன் உள்ளூர் தகராறைப் பெரிதாக எண்ணி, உத்தியோக முறையில் தலைவர் பதவிக்கு நிறுத்தப்பட்ட காங்கிரஸ் அபேட்சகருக்குப் போட்டியாக ஒருவரை நிறுத்தி வெற்றிபெறச் செய்து காங்கிரஸ் கட்டுப்பாட்டைக் குலைத்தார். இது ஆச்சாரியார் மனதைப் பெரிதும் புண்படுத்தியது. தமக்கு மிகவும் அத்யந்த சிநேகிதராகவும், தமது நம்பிக்கைக்கு மிகவும் பாத்திராகவும் உள்ள ஒருவரே இவ்விதம் வரம்புமீறிச் செய்த செயல் அவருக்குச் சகிக்கக் கூடாததாய்ப் போய் விட்டது. இந்நிலைமையே மீண்டும் காங்கிரஸி லிருந்து அவரை விலகும்படி செய்தது.

பின்னர், பொதுத் தேர்தலில் ஸ்ரீஜத் சத்திய மூர்த்தி சர்வ கலாசாலைத் தொகுதியை விட்டுக்கொடுத்து சர்தார்

படேலோடு வற்புறுத்தி நிறுத்தியதன் பேரிலேயே, தவிர்க்க முடியாத நிலைமையில் ஆச்சாரியார் மீண்டும் அரசியலில் கலந்து கொண்டார். அதுவரை, அவர் உபநிஷத ஆராய்ச்சி யிலேயே தமது அறிவாற்றலை ஈடுபடுத்தி யிருந்தார். அவர் பிறகு, திருச்சி, கோவை முதலிய இடங்களுக்கெல்லாம் போய்த் தீவிரமாகத் தேர்தல் பிரசாரஞ் செய்யலானார். இவரது தீவிரப் பிரசாரத்தைக் கண்டுதான், திவான் பகதூர் லி. எஸ். இரத்தினசபாபதி முதலியார் போன்ற பிரமுகர்கள் காங்கிரஸ் அபேட்சகர்களோடு போட்டிபோடு வதினின்றும் விலகிக் கொண்டனர்.

ஸ்ரீஜத் சத்தியமூர்த்திக்குப் பதிலாக நின்ற ஆச்சாரியார், பட்டதாரி வாக்காளர்களை யெல்லாம் தனித்தனியாகக் கடித மூலம் கேட்டுக் கொள்ள முடியாதென்று கூறிப் பத்திரிகையில் விண்ணப்பித்துக் கொண்டார். இவருக்குப் போட்டியாக ஸ்ரீ நாராயண குருப்பும், ஸ்ரீ எஸ். இராஜகோபாலனும் நின்றனர். இவரது தொகுதியில் மொத்தம் பதிவான 6000 - ஓட்டுகளில் ஸ்ரீஜத் இராஜகோபாலன் 270 - ஓட்டுகளும், ஸ்ரீ குருப் 372 - ஓட்டுகளுமே பெற்றனர். ஆகவே, இவர்களிருவரும் தாங்கள் கட்டிய ஜாமீன் தொகைகளை இழந்தனர்.

எதிர்பார்த்ததற்கு மேலாகவே, சென்னை மாகாணத்தில் ஜனப்பிரதிநிதி சபைக்குக் காங்கிரஸ் காரர்கள் மொத்தம் 215 - ஸ்தானங்களில் 159 - ஸ்தானங்களைக் கைப்பற்றினர். இவ்விதமே அரசாங்க சபைக்கும் காங்கிரஸ் காரர்களே பெரும்பான்மையாக வந்தனர்.

---

## பதினைந்தாவது இயல்.

### பிரதம மந்திரி பதவி.

ஆகவே, அக் காங்கிரஸ் கட்சிக்கு நம் ஆச்சாரியாரே தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இக் காங்கிரஸ் கட்சியில் பாஷாவாரியாகப் பார்த்தால் ஆந்திரர், மலையாளிகள், கர்நாடகர்கள், தமிழர் ஆகிய நால்வகைப்பட்ட மக்களும் அங்கத்தினர்களாக வந்திருக்கின்றனர். இந் நான்கு பிரிவினரும் ஏகோபித்து ஆச்சாரியாரைத் தங்கள் தலைவராகத் தேர்ந்தெடுப்பதென்றால், எவ்வளவு தூரம் அவர்கள் அவரிடம் நம்பிக்கை வைத்திருக்க வேண்டுமென்று சொல்ல வேண்டியதில்லை.

தலைமைப் பதவி வகிக்கக் கூடிய தகுதி ஒரு சிலருக்குத் தான் இயற்கையாக அமைந்திருக்கிறது. அவ்வித பெருந் தகுதி வாய்ந்தவர்களில் நம் ஆச்சாரியார் தலை சிறந்தவராவார். ஒரு நாட்டுக்கோ அல்லது ஒரு ஸ்தாபனத்துக்கோ தலைவராக இருப்பவருக்கு அறிவு ஆற்றல் நிர்வாகத்திறமை ஆகியவற்றோடு இராஜ தந்திரமும் இருக்கவேண்டியது அவசியம். நம் ஆச்சாரியார் இராஜ தந்திரமே ஒருருவானவர். அவரது இராஜதந்திர முறையே அரசியல் எதிரிகளையேயன்றி, நண்பர்களையும் நடுங்க வைத்து வருகிறது. அத்தகைய இராஜ தந்திரி பலபிரிவினரைக் கொண்ட காங்கிரஸ் கட்சிக்குத் தலைவராகவோ அரசியலில் பிரதம மந்திரியாகவோ வந்ததில் ஆச்சரிய மில்லையல்லவா!

பொதுத் தேர்தலில் ஈடுபடுவதற்கு முன்பிருந்தே காங்கிரஸ் தலைவர்களிடையே மந்திரி பதவி ஏற்பதா? வேண்டாமா? என்ற பிரச்சினை இருந்து வந்ததல்லவா? காங்கிரஸ்காரர்கள் ஆறு மாகாணங்களில் பெரும்பான்மையாக வந்து

விடவே, இப்பிரச்சினை பற்றி ஒரு முடிவுக்கு வரவேண்டிய அவசியம் ஏற்பட்டு விட்டது. எனவே, காங்கிரஸ் காரியக் கமிட்டியும், அகில இந்தியா காங்கிரஸ் கமிட்டியும் இப்பிரச்சினை பற்றித் தீவிரமாக வாதித்து, 'கவர்னர்கள் விசேஷாதிகாரங்களை யுபயோகிப்பதில்லை என்று வாக்குறுதி கொடுத்தால், காங்கிரஸ் காரர்கள் மந்திரி பதவி யேற்கலாம்' என்று தீர்மானித்தன. இவ்வித முடிவுக்கு நம் ஆச்சாரியாரும், ஸ்ரீஜத் சத்திய மூர்த்தியுமே மூலகாரணர்களாவர். ஆனால், கவர்னர்கள் வாக்குறுதி நிபந்தனையே காங்கிரஸ்காரர்கள் உடனே பதவியேற்க முடியாமற் போனதற்கும், பதவி வேட்டைக்காரர்கள் நான்கு மாதகாலம் ஆட்சியி லிருந்ததற்குங் காரணமாய் முடிந்தது. பினமி மந்திரிகளுக்கு உயிர்ப் பிச்சை தரம்வண்டி சட்டசபைகள்கூட கூட்டப்பட வில்லை.

டில்லியிலிருந்து வந்ததும் கவர்னர் அழைப்பின்மீது ஆச்சாரியார் அவரைக்கண்டு பேசினார். காங்கிரஸ் தீர்மானப் படி, வாக்குறுதி யளிப்பதாயின், தாம் மந்திரிசபை யமைப்பதாகக் கூறினார். ஆனால், கவர்னர் மேலுத்தரவை யொட்டி இதற்கு இசையவில்லை.

மூன்று மாதங்கள் கழிந்தன. இவ்வித அரசியல் நெருக்கடியைச் சர்க்கார் நீடிக்க விரும்பவில்லை. எனவே, காங்கிரஸ் காரர்கள் ஒத்துழைப்புக்கு வேண்டியபடி, இந்தியா மந்திரியும், வைஸ்ராயும் முதலிலிருந்த தங்கள் தீவிரத்தினின்றும் ஒருபடி இறங்கி, அரசியல் நிலைமையை விளக்கி, இம் மாகாண சுயாட்சியில் மந்திரிகளுக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் சுதந்திரத்தில் கவர்னர்கள் இம்மியளவும் தலையிட மாட்டார்கள் என்று உறுதி கூறினர். தாங்கள் விதித்த நிபந்தனைப்படி கவர்னர்கள் சார்பில் இந்தியா மந்திரியும், வைஸ்

ராயும் மறைமுகமாகவேனும் வாக்களிக்கவே, காங்கிரஸ் காரர்களும் தங்கள் பிடியைத் தளர்த்திக் கொடுத்தனர்.

எனவே, அடுத்துக் கூடிய கமிட்டிகளில் காங்கிரஸ் கட்சித்தலைவர்கள் கவர்னர்கள் அழைப்புக்கிணங்கிப்போய்ப் பதவிகளை ஒப்புக்கொள்ளும்படி தீர்மானிக்கப்பட்டது. அவ்விதமே, ஆச்சாரியார் கவர்னர் அழைப்புக் கிணங்கி மந்திரி சபைகளை அமைத்தார். அவர் அமைத்த மந்திரிசபை இது வரையில் இல்லாதி வகையில் நூதனமான முறையில் இருப்பதைப் பலரும் பாராட்டி வரவேற்றனர். சென்னை மாகாணத்திலுள்ள எல்லாப் பிரிவினர்க்கும் பிரதிநிதித்துவம் அளிக்கும் முறையில் பத்து மந்திரிகளையும், பத்து பார்லிமெண்டரிக் காரியதரிசிகளையும் ஆச்சாரியார் ஏற்படுத்தினர். இன்னின்ன வேலைக்கு இன்னின்னவர்களை நியமித்தால் தான் காரியம் நன்கு நடைபெறும் என்று அறிந்து ஆச்சாரியார் ஏற்படுத்தியிருக்கும் இவ்வமைப்பில் அனைவர்க்கும் பரமதிருப்தியே யாயினும், டாக்டர் இராஜன் ஸ்ரீ எஸ். இராமநாதன் ஆகிய இருவரை மந்திரி சபையில் யில் சேர்த்திருப்பதைப் பலர் விரும்பவில்லை. அதற்கு அவர்கள் கூறிய காரணங்களையும் நண்பர்கள் அறிவார்கள். அத்துடன், ஸ்ரீ ஜத் சத்திய மூர்த்திக்கு மந்திரி சபையில் இடமளிக்காததையும் ஒரு பெருங்குறையாகப் பலர் கருதினர். காங்கிரஸி லிருந்தே விலகிப்போய்விட்ட டாக்டர் இராஜனைச் சென்னை அரசாங்க சபையில் நியமன மெம்பராக நியமித்து மந்திரி சபையில் சேர்த்துக்கொண்டதுபோல், ஆச்சாரியார் ஸ்ரீஜத் சத்திய மூர்த்திக்கும் காலியா யிருக்கும் மற்றொரு நியமன ஸ்தானத்தை அளித்து ஏன் மந்திரியாக்கக்கூடாது என்று சிலர் வாதித்தனர். ஆச்சாரியார் இதையெல்லாம் அறியாதவரல்லர். எங்நோக்

கோடு அவர் நடந்து கொண்டிருக்கிறார் என்பதை அறிந்து கொள்ளாது யாரும் ஒன்றுஞ் சொல்வதற்கில்லை. ஆனால், சட்டசபை வேலையில் நீண்டகால அநுபவமும், அறிவாற்றலும் வாய்ந்த ஸ்ரீஜத் சத்திய மூர்த்தி, காங்கிரஸ் பதவியேற்று நடத்தும் இச் சமயத்தில் நம் மாகாண சட்ட சபைகளிலும் மந்திரி சபையிலும் இல்லாதது ஒரு பெருங் குறையேயாகும்.

ஸ்ரீ இராமநாதனுக்குக் கொடுக்கப்பட்டிருக்கும் விளம்பர இலாகா மந்திரி பதவி இதுவரை எங்குமே இல்லாத புதிய பதவியாகும். அப்பதவிக்கு ஸ்ரீ இராமநாதன் எவ்வளவு தூரம் பொருத்த முடையவர் என்பதை அவரது அறிவாற்றலையும் கல்வித்திறமையையும் மேனாட்டு அரசியல் அனுபவத்தையும் உணர்ந்தவர்கள் நன்கு அறிவர்.

ஆனால் ஆச்சாரியார் காங்கிரஸ் கட்சித் தலைவர் என்ற முறையில் தாம் பிரதம மந்திரியாகி அமைத்த மந்திரி சபை; காரியதரிசிகள் நியமனங்களிலிருந்து ஒரு விஷயத்தை உணரலாம். ஆச்சாரியார் அரசியல் வாழ்வை மேற்கொண்ட பின்னர், தம் நம்பிக்கைக்கும் அன்புக்கும் பாத்திரமானவர்களை எந்நிலையிலும் மறப்பதில்லை. விடுதலைப்போரில் கலந்து சிறை செல்லும் போதுஞ்சரி; நிர்மாண வேலைத்திட்டங்களை நிறைவேற்றி வைக்கும்போதும் சரி; இதுபோன்ற பெரும் பதவிகளை வகிக்க நேரும்போதுஞ்சரி; அவர் அவர்களைக் கைவிடுவதேயில்லை. டாக்டர் இராஜன், ஸ்ரீ எஸ். இராமநாதன் போன்றவர்கள் மந்திரிசபையில் இருப்பதற்கு இதுவே மூலகாரணமாகும்.

ஆச்சாரியார் மகாத்மா காந்தி தொடங்கிய ஒத்துழையாமைப் போராட்ட சம்பந்தமாகப் பகிஷ்காரப் பிரசாரஞ்

செய்தபோது, ஸ்ரீமான்கள் எஸ். இராமநாதன், கே. சந்தானம், என். எஸ். வரதாச்சாரியார் முதலியவர்கள் தாங்கள் அப்போதுதான் துவங்கவிருந்த வக்கீல் தொழிலை உதறித் தள்ளிவிட்டுத் தியாகத் தீயில் குதித்தவர்களாவர். டாக்டர் ராஜனும் அவ்விதமே பெரும் பொருள் வருவாய்க்கு இடமான டாக்டர் தொழிலை விட்டுத் தேசப்பணியில் ஈடுபட்டார். அவர்கள் ஒத்துழையாப் போரில் கலவாது தத்தம் தொழிலில் கவனஞ் செலுத்தி யிருப்பார்களானால், மற்றவர்களைப்போல் பெரும்பொருள் சம்பாதித்துச் சுகபோகத்தில் இருந்து கொண்டிருப்பார்கள். இந்நிலைமையை நன்கு மனதிற் கொண்டுதான் ஆச்சாரியார் பிற்காலத்தில் தமிழ்நாட்டுக் காதிசர்க்கா சங்கத்திலும், பிறகாங்கிரஸ் ஸ்தாபனங்களிலும் அவர்களுக்கு உத்தியோகம் கொடுக்கும்படி செய்தார். தாம் பிரதம மந்திரியாக வந்திருக்கும் இச்சமயத்திலும் அவர்களை மறவாது மந்திரிகளாகவும், காரியதரிசிகளாகவுஞ் செய்திருக்கிறார். ஆச்சாரியாரின் இப்பெருந்தன்மையான குணம் பாராட்டற்பாலதொன்றன்றோ?

நம் ஆச்சாரியார் பிரதம மந்திரியான பிறகு செய்திருக்கும் காரியங்களை அனைவரும் அறிவர். முன்பின் இவ்விதப் பெரும் பதவிகளில் இருந்து அநுபவமில்லா நம் ஆச்சாரியார் பொக்கிஷ மந்திரி என்ற ஹோதாவில் தயாரித்து சட்டசபைகளில் சமர்ப்பித்த வரவு செலவுத் திட்டத்தைக் கண்டதுமே அவரது நிர்வாகத் திறமையையும், புத்திகூர்மையையும் எதிர்க்கட்சியினர்கூட கண்டு வியப்புற்றனர். அவர் வகுத்த வேலைத் திட்டங்களை-மதுவிலக்குத் திட்டம், கைத்தொழில் பாதுகாப்புத் திட்டம் முதலிய வேலைத் திட்டங்களை ஸர். முகம்மது உஸ்மான், திவான் பகதூர்

அப்பாதுரைப்பிள்ளை போன்ற எதிர்க்கட்சிப் பிரமுகர்கள் கூட பலபட பாராட்டி யிருக்கின்றனர்.

சென்னை ஜனப்பிரதிநிதி சபையும், அரசாங்க சபையும் ஆரம்பிக்கப்பட்டதும், சென்னைக் கவர்னர் மெம்பர்களுக்கு நம்பிக்கை யுண்டாகும் வகையில் புதிய அரசியல் நிலைமையை விளக்கிப் பிரசங்கஞ் செய்தாரல்லவா! அவர் வந்து சென்றதுமே நம் ஆச்சாரியார், மேற்படி அரசியல் சட்டத்தின் போலித்தன்மையைப் புலப்படுத்தியும், இந்திய மக்களின் தேசிய கோரிக்கை இன்னதென்பதை விளக்கியும் தேசியக் கோரிக்கைத் தீர்மானத்தைக் கொண்டுவந்து நிறைவேற்றி வைத்தார். இதுபோன்றே, சமீபத்தில் பிரிட்டிஷ் சர்க்கார் நம்மீது சுமத்தவிருக்கும் சமஷ்டி அரசியலையுங் கண்டித்து ஒரு தீர்மானங் கொண்டுவந்து இரு சபைகளிலும் நிறைவேற்றினர்.

கடந்த ஆறுமாத காலத்தில் நம் ஆச்சாரியாரைப் பிரதம மந்திரியாகக் கொண்ட சென்னைக் காங்கிரஸ் மந்திரி சபை பொது மக்கள் நன்மைக்கான நல்ல காரியங்கள் பலவற்றைச் செய்திருக்கின்றன. இவை யெல்லாம் சமீபகால நிகழ்ச்சிகளாதலாலும், மந்திரிசபை சாதித்த காரியங்களைப் பற்றித் தனிப் புத்தகம் வந்திருப்பதாலும் விரிவாகக் கூற விரும்பவில்லை. அவைகளில் மிக மிகக் குறிப்பிடத்தக்கவை, சேலத்தில் முதன் முதலாக மதுவிலக்குத் திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வந்திருப்பதும், விவசாயிகள் கடன் நிவாரண மசோதாவை நிறைவேற்றிச் சட்டமாக்கி வைத்திருப்பதும், ராட்டைகளில் நூல் நூற்குந் தொழிலுக்கு 2,00,000-ரூபாய் உதவியாக அளித்திருப்பதுவே யாகும்.

இவ் வருஷம் சென்னை நகர் முதலிய இடங்களிலும் மது விலக்குச் சட்டம் அமுலுக்கு வரும் என ஊகிக்கப்படு

கிறது. ஆச்சாரியார் ஆட்சியில் கூடிய சீக்கிரம் தமிழ் நாட்டை விட்டு மதுவரக்கன் விரட்டி யடிக்கப்பட்டு விடுவான் என்பது திண்ணம்.

தாங்கள் குறைந்த சம்பளமாக 500-ரூபாயை ஏற்படுத்திக் கொண்டதுபோல், சர்க்கார் உத்தியோகஸ்தர் அதாவது ஐ. ஸி. எஸ். உத்தியோகஸ்தர்கள் உட்பட அனைவருக்கும் தராதரத்துக்கேற்றபடி சம்பளத்தைக் குறைத்திருப்பதும், நீண்ட காலமாகக் கிளர்ச்சி செய்தும் அசைக்க முடியாதிருந்த ஜெனரல் நீல் துரையின் உருவச்சிலையை அப்புறப்படுத்திச் சென்னை மியூஸியத்தில் கொண்டுபோய் வைத்ததும் ஆச்சாரியாரின் துணிகரமான செயல்களுக்குச் சிறந்த உதாரணங்களாகும்.

பட்ஜட் விவாதத்தின்போதும், கடன் நிவாரண மசோதா விவாதத்தின்போதும் எதிர்க்கட்சியினர், ஜஸ்டிஸ் கட்சி, முஸ்லீம்லீக் கட்சி, ஐரோப்பியர் கட்சி ஆகிய சிறுபான்மைக் கட்சிகளெல்லாம் ஒன்று சேர்ந்து மந்திரிகளைப் பலமாகத் தாக்கிப் பேசியிருப்பதை அனைவரும் அறிவர். மந்திரிகள் செயல்களைக் குறை கூறுவதற்கென்றே இருப்பவர்கள்போல் காணப்படுபவர்களில், ஜனப்பிரதிநிதி சபையில் ஸர். ஏ. டி. பன்னீர் செல்வம், ஸ்ரீ எம். ஏ. பாலட், ஜனுப் அப்துல் ஹமீத்கான், மிஸ்டர் லாங்லி முதலியோரும், அரசாங்க சபையில் ஸர். கூர்மா வெங்கடரெட்டி நாயுடு, ஸ்ரீ ஜே. ஏ. ஸல்டான்ஹு முதலியோரும் குறிப்பிடத் தக்கவர்களாவர். இவர்கள் அத்தனை பேருடைய எதிர்ப்புகளையும் நம் ஆச்சாரியாருடைய ஆணித்தரமான பதில்கள் தவிடு பொடியாக்கி விட்டன. அவரது திறமையான வாதத்தின் முன் எதிர்க்கட்சியினரின்

விதண்டா வாதங்களனைத்தும் இருந்த இடந்தெரியாமல் போய் விட்டன.

ஆச்சாரியார் உயர்தர பாடசாலைகளில் முதல் மூன்று பாரங்களுக்கும் ஹிந்தி பாஷையைக் கட்டாய பாடமாக வைக்கத் தீர்மானித்திருக்கும் விஷயத்தில் தமிழ் நாட்டில் சிறிது எதிர்ப்பு இருந்து வருகிறது. இவ்விஷயத்தில் எதிர்ப்பாளர்கள் தமிழ் மொழியின் வளர்ச்சி கெடுமென்று கூறுவதற்கோ, இன்னும் பலவித காரணங்கள் கற்பிப்பதற்கோ சிறிதும் ஆதாரமேயில்லை. ஹிந்தி கட்டாய பாடமாக ஏற்படும் வகையில் பாடபுத்தக முறை திருத்தப்பட்டு, இங்கிலீஷ் நீங்கலாக மற்ற பாடங்களெல்லாம் தாய்மொழியாகிய தமிழிலேயே கற்பிக்கப்படப் போவதாகத் தெரிவதால், இதனால் தமிழ்மொழிக்கு ஆக்கமேற்பட் டிருக்கிறதேயொழிய கேடொன்றுமில்லை. தமிழ்மொழி வளர்ச்சியில் மிகக் கருத்துடைய ஆச்சாரியார் ஆட்சியில் அம்மொழிக்கு எவ்விதக் குறைவும் ஏற்படா தென்பது அடியேனது தாழ்மையான கருத்து.

ஆச்சாரியார் ஆட்சியில் ஆதித்திராவிட சகோதரர்களுக்கு ஆலயப்பிரவேச உரிமை அளிக்கும் வகையில் இன்னும் சட்டம் இயற்றப்படாததைத் தான் பெருங்குறையாகப் பலர் கருதுகிறார்கள். ஆதித்திராவிடர்களுக்குச் சம உரிமை அளிக்கும் விஷயத்தில் ஆதியிலிருந்தே பாடு பட்டு வரும் ஆச்சாரியார் கூடிய சீக்கிரம் சென்னை மாகாணத்திலுள்ள சகல ஆலயங்களையுந் திறந்துவிடத் தக்க வழியையுண்டுபண்ணுவார் என்பது நிச்சயம். சமீபத்தில் டில்லியில் கூடிய பொருளாதார மந்திரிகள் மகா நாட்டுக்குச் சென்றுவிட்டுப் பம்பாய்க்கு வருகையில் அங்கு நடந்த ஒரு கூட்டத்

7

தில் "நான் இறப்பதற்குள் ஹரி ஜனங்களுக்கு ஆலயப் பிர வேச உரிமை அளிக்காது போகேன்" என்று உறுதி கூறி யதை நாம் சிந்தித்துப் பார்க்கவேண்டும். கால தேச வர்த்த மானத்தை யநுசரித்து ஆச்சாரியார் காரியம் நடத்துபவ ராதலால், அவர் ஆலயப் பிரவேச உரிமை வழங்குவதற் குரிய சமயத்தை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறுர்.

ஆச்சாரியார் காங்கிரஸ் கட்சித் தலைவராயும், பிரதம மந்திரியாயும் இருந்து வருவதால், சில விஷயங்களில் சர்வாதிகாரத்துவ முறையில் நடந்து கொள்ளுகிறுர் என்று பிறர் - ஏன் ? காங்கிரஸ் கட்சியிலேயே யுள்ள சில ஆந்திர சகோதரர்களும் சில தமிழ்ச் சகோதரர்களும் முணு முணுக்கலாயினர். ஆனுல், விவசாயிகள் கடன நிவாரண மசோதாவைக் கொண்டு வரக் கூடிய முதல் சட்டசபைக் கூட்டத்தின்போது நடந்த காங்கிரஸ் கட்சிக்கூட்டத்தில் ஆச்சாரியார் இதுவரை செய்த காரியங்களை ஆதரித்து அவரிடம் தங்களுக்குப் பூரண நம்பிக்கை யிருப்பதாகத் தீர்மானம் நிறைவேற்றினர். அத் தீர்மானத்துக்குப் பாதக மாக 4 பேரே அதுவும் ஆந்திரர்களே ஓட்டுக்கொடுத்தனர். இவ்விதமே சமீபத்தில் வத்தலகுண்டில் கூடிய 49-வது தமிழ் மாகாண காங்கிரஸ் மகா நாட்டிலும் ஆச்சாரியார் காங்கிரஸ் கமிட்டித் தலைவர் தேர்தல் விஷயத்தில் அநாவசிய மாகத் தலையிட்டார் என்று சிலர் குறைகூறினர். ஆயினும், அங்கும், மந்திரி சபை செய்த காரியங்களையும், ஆச்சாரி யாரைத் தலைவராகக் கொண்ட மந்திரிகளையும் பாராட்டி அவர்களிடம் தங்கள் நம்பிக்கையைத் தெரிவித்து மகா நாட்டில் தீர்மானம் நிறைவேற்றினர்.

ஆச்சாரியார் சிலர் கூறுகிறபடி சர்வாதிகார முறையில் நடந்து கொள்கிறுரென்றுல், அது பொது நலத்தை யொட்

டியே யிருக்குமே யொழிய, தன்னலத்தைச் சார்ந்திராது என்பது திண்ணம். ஆச்சாரியார் சுயநல முடையவர் என் பதை அவரது எதிரிகளும் துணிந்து கூறமாட்டார்கள். அவர் சுயநல நோக்குடையவரா யிருந்தால், பெரும் பொருள் வருவாயுடைய வக்கீல் தொழிலையும், சுகபோகத் தையும் உதறித் தள்ளி விட்டுத் தேசப்பணிக்கு வந்திருக்க மாட்டார். வக்கீல் தொழில் நடத்தி வரும்போதே தாம் சம்பாதிக்கும் பொருளில் பெரும்பாகத்தைப் பொது நல சேவைக்கு உதவியும், கடைசியாகக் குடும்ப வாழ்வைத் துறந்துவிட்டு வருகையில் எஞ்சியிருந்த சுமார் 30,000 - ரூபாயையும் தம் மக்களுக்கு அவர்களது பிற்கால வாழ் வுக்கு வைக்கவேண்டுமே யென்ற எண்ணமில்லாது, தம் மக்களோடு இந்தியா முழுவதையுஞ் சுற்றுப்பிரயாணஞ் செய்து செலவு பண்ணிவிட்டு ஒருதம்பிடியுமில்லாது தேச சேவையில் ஈடுபடமாட்டாரல்லவா! மேலும், ஆச்சாரியார் பொது வாழ்வில் மிகவும் ஜாக்கிரதையாக பரிசுத்தத்தைக் காக்கவேண்டுமென்ற எண்ணமுடையவர். பொது வாழ்வில் அவர் நண்பர், பகைவர், நொதுமலர் என்ற தயவு தாட்சண்ய மில்லாது கண்டிப்பாக நடந்து கொண்டுவருவ தனுல்தான் டாக்டர் நாயுடு போன்ற பல நண்பர்களுடைய பகைமைக்கு ஆளானர். மற்ற விஷயங்களில் யார் எவ் வளவு அவதூருகத் தம்மைப் பேசினும் அவர்கள் அறியாமையைக் கண்டு புன்சிரிப்புகொண்டு இலட்சியஞ் செய்யாதிருக்கும் ஆச்சாரியார், பொது வாழ்வில் தமக்குக் களங்கமுண்டாகும்படி எவரேனுங் கூறினுல் அதைச்சிறிதும் பொறுக்க மாட்டார். கதர்த்திட்டத்துக்குச் ஸ்ரீ சங்கர்லால் பாங்கர் உதவிய நிதி சம்பந்தமாக, ஆச்சாரியாரது தூய வாழ்வுக்குக் களங்கமுண்டாகும் வழியில் ஒரு பத்திரிகா சிரியர் எழுதி விட்டுப் பட்டபாடு நாடறியுமே! சுதந்திரப்

போராட்ட சம்பந்தமாக வன்றிக் கோர்ட்டு ஏறியறியாத நம் ஆச்சாரியார் மேற்குறித்த விஷயமாக மான நஷ்ட வழக்கு தொடுத்து வாதித்தார் எனின், மானத்தில் எவ்வளவு கருத்துடையவர் என்று தெரிந்துகொள்ளலாம்.

மதுவிலக்கு, சம்பளக்குறைப்பு, கடன் நிவாரணம் முதலிய நன்முயற்சிக்கு ஏற்பட்ட பலத்த எதிர்ப்புகளையெல்லாம் சமாளித்துக்கொண்டு ஆச்சாரியார் நடத்திவரும் அரசியல் நிர்வாகத் திறமையைக் கண்டு, சர்க்கார் காரியதரிசிகளே யன்றி, கவர்னரும் பாராட்டுகிறாரென்றால், அவரது அறிவாற்றலை என்னென்பது! ஆச்சாரியார் நடத்திக் காட்டிய வேலைத்திட்டங்களில், ஐக்கிய மாகாணம், பம்பாய் போன்ற பிற மாகாண மந்திரி சபையாரும், மதுவிலக்கு; கடன் நிவாரணம் போன்றவைகளைப் பின்பற்றித் தங்கள் மாகாணங்களில் நிறைவேற்ற முயன்று வருகிறார்களென்றால் அதிகம் கூறுவானேன்!

ஆச்சாரியார் தலைமையில் சத்தியாக்கிரகப் போராட்ட காலங்களில் தமிழ் நாடு தலைசிறந்து விளங்கியதுபோலவே, அரசியலை யேற்று நடத்தும் இச் சமயத்திலும் மற்ற மாகாணங்கள் எல்லா வற்றையுங் காட்டிலும் ஒருபடி உயர்ந்து விளங்குகிறது. இன்னும் அவரது தலைமையில் தமிழ் நாடும் தமிழ்மக்களும் எந்தெந்த விதமான பேரும் புகழையும் அடையப் போகிறார்களோ? யாரறிவார்! தமிழ் நாட்டுமக்களுக்கே சேம நிதியாக இருந்துவரும் ஆச்சாரியார் இன்னும் பலகாலம் நம்மிடையே இருந்து நமக்கும் பிறர்க்கும் நன்மைபுரியும் வகையில், எல்லாம்வல்ல முழுமுதற் கடவுள் அவருக்கு இன்னருள் புரிவாராக.

முற்றிற்று.

———

# அநுபந்தம்



இவ்வருஷம் ஜனவரி மாத முதலில் ஆச்சாரியார் நிறைவேற்றி வைத்த விவசாயிகள் கடன் நிவாரண சட்டம் வைஸ்ராயின் அங்கீகாரமும் பெற்றுவிட்டது.

அதன் பின்னர், இடைவிடா உழைப்பின் பயனாக ஆச்சாரியார் உடல்நலம் குன்றியது. இந் நிலைமையிலும், ஹரிபுரா காங்கிரஸுக்கு முன்னர், வார்தா கஞ்சில் நடைபெற்ற காரியக் கமிட்டிக் கூட்டத்திக்கு அவர் போய்க் கலந்து கொண்டு தமது அரிய ஆலோசனைகளைக் கூறி விட்டுத் திரும்பிவந்தார். மேலும் அவர் ஹரிபுரா காங்கிரஸுக்கும் விஜயஞ் செய்ய இருந்தார். ஆனால், டாக்டர்கள் கூறிய யோசனையின்மீது ஆச்சாரியார் ஹரிபுரா காங்கிரஸ் பிரயாணத்தை நிறுத்திவிட்டு குற்றாலத்துக்குப் போய்த் தங்கலானார்.

அரசியல் கைதிகளை விடுவிக்கும் விஷயத்தில் வைஸ்ராய் தலையீட்டால் ஐக்கிய மாகாண மந்திரி சபையாரும், பீஹார் மந்திரி சபையாரும் முறையே ராஜிநாமா செய்து விட்டனர். இவ்வரசியல் நெருக்கடி காங்கிரஸ் தலைவர்களிடையேயும், பொது மக்களிடையேயும் பெரிய பரபரப்பை யுண்டு பண்ணியது. இது சம்பந்தமாக மகாத்மா காந்தி உள்ளிட்ட காங்கிரஸ் தலைவர்களும் காங்கிரஸ் மந்திரிகளும் கூடி யோசித்து ஒரு முடிவுக்கு வரவேண்டி யிருந்ததால் நமது ஆச்சாரியாரை உடனே வருமாறு காங்கிரஸ் தலைவர்கள் தந்தி யனுப்பினார்கள். ஆயினும், ஆச்சாரியாரால் போகமுடியவில்லை.

இதனிடையே, மகாத்மா காந்தியின் அரிய யோசனையாலும் முயற்சியாலும் மேற்படி நெருக்கடி ஒருவாறு தீர்க்கப்பட்டதை அன்பர்கள் அறிவார்கள். பீஹார், ஐக்கிய மாகாணங்களில் ஏற்பட்ட நெருக்கடியால், மற்ற ஐந்து மாகாணங்களிலும் ஆட்சிசெலுத்திவரும் காங்கிரஸ் மந்திரி சபைகளும் ராஜிநாமா செய்ய வேண்டி வருமோ என்ற பீதி மக்களுக்கு ஏற்பட்டது. ஒரு சில காங்கிரஸ் தலைவர்கள் அவ்வித யோசனையுங் கூறினார்கள். மகாத்மா காந்தி இந்த யோசனைக்கு இடங்கொடுக்கவில்லை. ஆகையால் அவ்வித அசம்பாவிதம் எதுவும் நேராது போயிற்று. இல்லையானால், இன்று நாம் நம் ஆச்சாரியார் இம் மார்ச்சு முதலில் இருசபைகளிலும் சமர்ப்பித்திருக்கும் 'நல்ல பட்ஜெட்'டின் பயனை அடைய முடியாமல் போயிருக்கும்.

ஆச்சாரியார் சமர்ப்பித்திருக்கும் இந்த இரண்டாவது பட்ஜெட்டைக் காங்கிரஸ் பட்ஜெட் டென்றும், பொது மக்களுக்குப் பெரிதும் நன்மை தரக்கூடிய நல்ல பட்ஜெட் டென்றும் துணிந்து கூறலாம்.

இதிலுள்ள பிரேரணைகளும் உத்தேசங்களும் மாகாணத்துப் பொது மக்களின் அபிலாஷைகளை யநுசரித்ததாக இருப்பது பாராட்டத் தக்கதாகும். இப் பட்ஜெட்டில் முக்கியமாகக் குறிப்பிடத் தக்க அம்சங்கள் : கிராம மக்களுக்குக் குடி நீர் வசதித் திட்டம், விவசாயிகள் கடன் உதவித் திட்டம், கால்நடை மேய்ச்சல் கட்டணக் குறைப்பு, சித்தூர் கடப்பை ஆகியவைகளில் மதுவிலக்கு முதலியவைகளாகும்.

நம் மாகாண சரித்திரத்திலேயே மிகவும் பிரசித்தி பெற்ற அம்சமான மது விலக்கு சட்டம் சேலம் ஜில்லாவில் இந்த மூன்று நான்கு மாதங்களில் பரிபூரண வெற்றியை அளித்திருப்பதால் அந்த ஜில்லாவைச் சேர்ந்தாற் போலுள்ள சித்தூர், கடப்பை ஜில்லாக்களிலும் பெரு வெற்றியை யளிக்கும் என்பது திண்ணம். சேலம் ஜில்லா கலெக்டர் மிஸ்டர் டிக்ஸன் துரை, சேலம் ஜில்லாவில் மதுவிலக்கால் ஏற்பட்டிருக்கும் பலாபலன்களைப் பற்றி, சர்க்காருக்கு ஒரு அறிக்கை சமர்ப்பித் திருக்கிறார். அவ்வறிக்கையிலிருந்து மது விலக்கால் ஏழை மக்களுக்கும் தொழிலாளி, விவசாயிகளுக்கும் பெரிதும் நன்மைகள் ஏற்பட்டிருக்கிற தென்றும், அவர்களது வாழ்க்கையில் மறுமலர்ச்சி ஏற்பட்டிருக்கிறதென்றும் நன்கு தெரிகிறது. மது விலக்கில் நம்பிக்கை யில்லாத - மதுபான பழக்கமுடைய-ஐரோப்பிய வர்க்கத்தைச் சேர்ந்த ஐ. ஸி. எஸ். உத்தியோகஸ்தர், 'மதுவிலக்கு ஏழை மக்களுக்கு ஒரு பெரிய வரப்பிரசாதமா யிருக்கிறது. இப்போது போலவே சட்டம் திறமையாக அமுல் நடத்தப்படுமானால் குடியானவர்கள், தொழிலாளர்களின் வாழ்க்கையில் மகத்தான சுபீட்சம் ஏற்பட்டு அது நிரந்தரமாக நிலைத்திருக்கும் என்று நம்பிக்கையுடன் எதிர் பார்க்கிறேன்' என்று கூறியிருக்கிறாரென்றால், மது விலக்கு சட்டம் நம் மாகாண முழுவதும் அமுலுக்கு வந்து விட்டால் நம் நாடே சுபீட்ச மடைந்து விடும் என்பதில் சந்தேகமுண்டோ !

இத்தகைய மகத்தான வாழ்வுக்கு அடிகோலி யிருக்கும் ஆச்சாரியார் காங்கிரஸ் பட்ஜெட்டின் மீது இப்போது இரு சபைகளிலும் விவாதம் நடந்து வருகிறது. வழக்கம் போல் எதிர்க் கட்சியினர் சாரமற்ற எதிர்ப்புகளையும் அர்த்தமற்ற ஆட்சேபங்களை கிளப்பியும் எதிர்த்து வந்தாலும், பொது மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தும் வகையில் பல விதத்திலும் நன்மை செய்ய முயன்று வரும்ஆச்சாரியாரின் பட்ஜெட், முன்னைய பட்ஜெட்டைப் போலவே, இரு சபைகளின் பரிபூரண அங்கீகாரத்தையும் பெறும் என்றும், அப் பட்ஜெட் திட்டங்களின் பலன்களை நாம் அனுபவிப்போம் என்றும் நம்புவோமாக.

## ஒருமுறை ஆபரேஷன் செய்யப்பட்டு குணமடையாமல் டான்ஸினல் என்னும் அரிய மருந்தினல் (டான்சில்ஸ்) தொண்டையில் சதை வளர்வது பூர்ண குணமானது.

பி. வி. சாரங்கபாணி பிள்ளை அவர்கள் எழுதுகிறார்.

(ஜெனரல் கண்டராக்டர், ராயபுரம், மதராஸ்.)

எனது பேரன் நாகராஜனுக்கு வயது 12. அவனுக்குக் கடந்த இரண்டு வருடங்களாக தொண்டையினுள் சதை வளர்ந்து அதனல் அவன் ரொம்பவும் பாதை பட்டுக் கொண்டிருந்தான். இங்கிலேயில் அவனை தொண்டை வயித்திய நிபுணரென்று கருதப்படும் ஒருவரிடம் கொண்டுபோய் காண்பித்ததில் அவர் பார்வையிட்டு தொண்டையினுள் வளர்ந்திருக்கும் சதையை அறுத்தெடுத்துவிட்டால் பூரண சுகமாய் விடுமென்று அவர் சொன்னதின் பேரில் நாங்கள் அதற்கு ஒப்புக்கொண்டு அவனுக்கு தொண்டையினுள் வளர்ந்திருந்த சதையை அவரைக் கொண்டே அறுத்தெடுக்கச் செய்தோம், ஆனல் சொல்ப வாரங்களுக்குள் மீண்டும் முன்னிருந்ததைக் காட்டிலும் பருமனய் வளர்ந்து விட்டது. பின்னர் டான்ஸினல் லெபோரேடரியில் தங்களால் தொண்டையில் சதைவளர்தலே (டான்ஸில்ஸ்) கத்தியால் அறுத்தெடுக்காமல் மருந்தினலேயே கரைத்துவிடுகின்றீர்களெனக் கேள்வியுற்று அவனைத் தங்கள்பால் அழைத்துவந்தோம். தாங்கள் டான்ஸினல் என்னும் ஒப்புயர்வற்ற அரிய மருந்தினல் தொண்டையினுள் தடவியும் உள்ளுக்குக் கொடுத்தும் வந்தீர்கள். என்ன ஆச்சரியம்! சில வாரங்களுக்குள் பலகையின்மேல் வைக்கப்பட்ட ஐஸ் துண்டைப் போன்று மேற்சொன்ன தொண்டையினுள் வளர்ந்துவந்த சதையானது மாயமாக மறைந்தோடியது. இப்பொழுது எனது பேரன் பூரண சுகத்துடனிருக்கின்றான். இதன் ஞாபகார்த்தமாய் தங்களுக்கு ஓர் தங்க பதக்கம் பரிசளித்திருக்கிறது.

(Sd). பி. வி. சாரங்கபாணி பிள்ளை.

---

தயாரிப்பவர்:- டான்சினல் லெபோரேடரி;

53, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, சென்னை.

## இந்நூலாசிரியர் இயற்றிய
# வேறு சில நூல்கள்.

### தீண்டாதார் யார்?

ஓர் சமூக சீர்திருத்த நாடகம். பேரறிஞர்களான சுவாமி வேதாசலம், திரு - வி. கலியாணசுந்தர முதலியார், தெ. பொ. மீனாட்சிசுந்தரம் பிள்ளை எம்.ஏ., பி.எல்., சுரேந்திரநாத் ஒக்லி ஆரியா எம். ஏ., ஆகியோர் சிறப்புரைகள் கொண்டது.

விலை அணா 8.

### புருடோத்தமன். (இரண்டாம் பதிப்பு அச்சில்)

ஆங்கில மகாகவி வில்லியம் ஷேக்ஸ்பியரின் நாடகமொன்றைத் தழுவி யெழுதியது. அண்ணாமலை சர்வகலா சாலைத் தமிழ்ப் பேராசிரியர் உயர்திரு. எஸ். சோமசுந்தர பாரதி எம்.ஏ.,பி.எல்., நவசக்தி ஆசிரியர் திரு. வி. கலியாண சுந்தர முதலியார், சென்னை மேரி ராணியார் கலாசாலைப் பிஸிக்ஸ் புரொபஸர் ஸ்ரீமதி ஈ. த. இராஜேஸ்வரி எம். ஏ., எல். டி., வித்வான்-தெ. பொ. மீனாட்சிசுந்தரம் பிள்ளை, சென்னைச் சர்வ கலாசாலைத் தமிழ்ப் பேராசிரியர் - வையாபுரிப் பிள்ளை முதலியோர் சிறப்புரைகளை வழங்கியிருக்கிறார்கள்.

விலை அணா 12.

### "யான் ஏன் பெண்ணாய்ப் பிறந்தேன்?"

(இரண்டாம் பதிப்பு அச்சில்)

விதவைக் கொடுமையை விளக்கும் சமூக சீர்திருத்தக் கதை. லேடி வில்லிங்டன் டிரெயினிங் காலேஜ் தலைமையாசிரியை - சகோதரி - எஸ். சுப்புலட்சுமி பி. ஏ., எல். டி., முகவுரையும், பண்டிதை - அசலாம்பிகை அம்மையார் அபிப்பிராயமும் கொண்டது.

விலை அணா 6.

### ஏனாதிநாத நாயனார் சரித்திரம்.

அறுபான்மும்மை நாயன்மாரில் ஒருவராயும், 'ஏனாதி நாதன் தன் அடியார்க்கும் அடியேன்' என்று சுந்தரமூர்த்தி சுவாமிகளாலும் சேக்கிழாராலும் புகழ்ந்து பாடப்பட்ட

வராயுமுள்ள சான்றோர்குலப் பெரியார் ஏனாதிநாத நாயனார் சரித்திரம் விரிவான முறையில் எழுதப் பட்டிருக்கிறது. திரு. வி. கலியாணசுந்தர முதலியார், சைவ சித்தாந்த சமாஜக் காரியதரிசி - மா. பாலசுப்பிரமணிய முதலியார், தெ. பொ. மீனாட்சிசுந்தரம் பிள்ளை ஆகியோர் கருத்துரை கொண்டது. விலை அணா 4.

## "இவ்வுலகைத் திரும்பிப்பாரேன்?"

நவநாகரிக மோகத்திலும், ஆங்கிலக் கல்விச் செருக்கிலும் மூழ்கியுள்ள ஆண் பெண்களின் மனோபாவங்களையும், விபரீத செயல்களையும் சித்திரித்து எழுதப்பட்ட சமூக சீர்திருத்தக் கதையாகும். மனித வாழ்க்கையில் நடைபெறும் உண்மைச் சம்பவங்களைத் தழுவிய கதைப்போக்கின் சிறப்பும், கற்பனைத்திறனும் இனிய எளிய உரை நடையும், கதைப் போக்கிற்கேற்ப சித்திரிக்கப்பட்டிருக்கும் சித்திரப் படங்களும் படிப்பவர் உள்ளங்களைக் கொள்ளை கொள்ளும்.

விலை அணா 14.

## காதலனா? காதகனா?

கலாசாலை மாண மாணவிகளின் ஆடம்பர வாழ்க்கையையும், விபரீதப் போக்கையும் அதனால் அவர்கள் அடையும் சீர்கேட்டையும் தெளிவாக எடுத்துக் காட்டுவது இந்நூல்.

விலை அணா 10...

## சீமாட்டி கார்த்தியாயினி. (அச்சில்)

ரஷிய தத்துவ ஞானியும், போராசிரியருமான லியோ டால்ஸ்டாய் எழுதியுள்ள "Anna Karinana" என்ற சிறந்த கதையைத் தழுவி எழுதப்பட்டது. முதனூல் சிறப்புனைத்தும் இத்தமிழ் மொழி பெயர்ப்பில் வாசகர்கள் படித்து ரஸிக்கலாம்.

---

இந்நூல்கள் கிடைக்குமிடம்:—

சக்தி பிரசுராலயம்

வேலாயுதராஜா சந்து,

இராபர்ட்ஸன் பேட்டை, மயிலாப்பூர், சென்னை.